யால சொலலத்துணிவோம்! இதுநிற்க, விஷ்ணுவால ஞானமடைநதவாகளுணடெனின், அவர்களையின்னுமொனறு வெளிப்படுத்தலவேண்டும. ஒருவருமிலலையாகவும, ஞானுதிககம விஷ்ணுவுக்குக கூறுவது துரபிமானமெனக. கண்ணன அருசசுனனுக்குக கீதாவுபதேசஞ் செயதிலலையோவெனின, அநதஞானம் உபமன்னிய முனிவரிடததுப் பெறறதேயனறிச சாவகஞுதையால ஞானுதிக்கங கூறுவது பொருந்தாதெனக. கிருஷ்ணா ஞானுதிககமடைந்தவராயினும ஆசாரியாதிககம பெருமையால அருசசுனனுக்கு அவருபதேசிததஞானம அஸ்திரமாகிமீணடும உததரகீதையையுபதேசித்தனா. இபபடி யிரணடுமுறை யுபதேசிககபபெறறும அவ்வருசசுனன கணணபபராகஅவதரிதது சிவாராதனததால முததியடைநத மானமியததை மேலிடஙகளில (எஅ) வநது பககததில கூறியிருககின்றோமாகையால விஷ்ணுவுக்கு ஞானுதிககமுணடெனபதும இலலையெனபதும புததிமானகள கணடறியாமறபோகா. சிவபெருமானேவெனின், தக்ஷிணுமூர்த்தமாயெழுநதருளிச சநகாதிமுனிவர்க்கருளியும, திருபபெருநதுறையில குருநதடியிலெழுநதருளி வாதவூராடிகளுக்க ருளியும, இன்னுமபலவாறு ஞானுசிரியததலைமை தோனறவினையநது சிஙமயகோலங காட்டினிறவுணமைமையச சஙகரஸமஹிதை, ஹாலாஸ்யமாஹாத்மிய முதலிய பிரமாணஙகளால நிசசயிககககூடுமெனக. இதுமட்டோ, மநதிரம, யநதிரம், தநதிரம, சிறபம், வைதயம, ஜோதிடமுதலிய சர்வசாஸ்திர ஞானுதிககமுஞ சிவனுககே அந்தந்த நூலகளில் கூறப்பட்டதன்றி யிதரதேவதாசம்பந்தம நிரஸ்தமெனக. "அஷ்டாதசாநாம்வித்யாநாமேதாஸாம்பிந்நவர்த்மநாம்। ஆதிகர்த்தா கவி: ஸாக்ஷாச்சூலபாணிரிதி ச்ருதி:" என்கிறவாக்கியததால் அஷ்டாதசவித்தைக்குங கர்ததா சூலபாணியாகிய சிவபெருமானேயென்று பெறப்பட்டவுணமையானுந தெளியகதடவா. இது

காறுங்கூறிய நியாயங்களால் ஞானாதிக்கமே விஷ்ணுவுக்கில்லையென்று வெளிப்பட்டதனால் மோக்ஷாதிக்கமுண்டென்று நாமெந்த ஆதாரத்தால் சொல்லத்துணிவோம். ஆயினும் விஷ்ணுவை ஆச்ரயிப்பவர்களடையுங் கதியாதெனின், விஷ்ணுபதத்தை யடைவார்களென்பதில் எமக்கொரு ஆடங்கமுமின்றென்க. அது மோக்ஷபதமல்லவோ வெனின், காலத்திரயத்தினுமன்றும். மோக்ஷமென்பது சாலோகம், சாமீபம், சாரூபம், சாயுஜ்யமென்று அதிகாரபேதத்தால் சரியை கிரியை யோக ஞானங்களை அநுஷ்டிப்பவர்கள் அடையும்பேறாக நிச்சயமாகையால் சரியைக்கே அதிகாரிகளல்லாத விஷ்ணுபக்தர்களாகிய பாஞ்சராத்திரிகள் உண்மைஞானத்தாலடையுஞ் சிவப்பேற்றினை எப்படியடைவார்கள்? சிவனை ஆராதித்துப் பரமபதமாகிய உன்னதஸ்தானத்தை விஷ்ணுமூர்த்தி அடைந்தாரென்று கூறும் ருக்ஸம்ஹிதாவாக்கியத்தை மேல் (௭௮) வது பக்கத்திலேதானே கூறியிருக்கின்றோமாகையால் மோக்ஷபதம் இதுவாகுமென்று புத்திமான்கள் கண்டிராமற் போகார். பாஞ்சராத்திரிகள் விஷ்ணுசாரூப்யத்தையே பரமமுத்தியென்று கொண்டவராகையால் ஞானத்தின் பிரயோசனமாகிய சிவசாயுஜ்யப்பேறு அவர்க்குக் கிட்டாமற் போயிற்றென்க. இங்கே விஷ்ணு சாரூப்யமென்றது விஷ்ணுபதமென்றும் இந்திராதிபதங்கள் போலாமேயன்றி மோக்ஷபதமென்பது அறவேநிரஸ்தமென்க.

"கொள்ளேன் புரந்தரன் மாலயன் வாழ்வு குடிகெடினு
நள்ளேனினதடியா ரொடல்லா னரகம்புகினு
மெள்ளேன் றிருவருளாலேயிருக்கப் பெறினிறைவா
வுள்ளேன் பிறதெய்வ முன்னையல்லா தெங்களுத்தமனே."

என்றருளிய ஸ்ரீமத் மாணிக்கவாசக சுவாமிகள் திருவாக்கால் பிரம்ஹ விஷ்ணுக்களுடைய பதங்களை முமுக்ஷுக்கள்

விரும்பாரென்னு முண்மை வெளிப்பட்டதன்றியும், "శ్రీమా త్వత్పాదపంకజసేవకో మే భవిష్యతి । విధిత్వం విష్ణుత్వం దికసిఖిలు తస్యాః ఫలమితి । పునశ్చ త్వాం ద్రష్టుం దివిభువి వహన్ పక్షమృగతా మధ్య స్థాత్త దంఘ్రి ద్వయం హర శివత్వం భవిష్యతి" என்றருளிய சங்கராசாரியார் திரு வாக்கால் விஷ்ணு பிரம்மாக்களாதிகளை யடைந்தால் பன்றி யாகவும், ஹம்ஸமாகவுமிருந்து சிவனுடைய திருவடிஞா னத்தை யிழக்கவேண்டி வருமாகலின் அப்பதங்களை விரும் புவது புத்திமானென்னு நியாயம் வெளிப்பட்டதனால் விஷ் ணுபதமே மோக்ஷஸ்தானமென்றும், மோக்ஷமளிப்பவர் விஷ்ணுவேயென்றும், முமுக்ஷுக்கள் விஷ்ணுபதத்தையே விரும்புவார்களென்றுஞ் சொப்பனங்கண்டு பிதற்றிய சோம் பேறிவாதஞ்சோர்ந்து விட்டதென்க. ஆயின், கண்டாகன்ன னுக் கண்ணன்பால் மோக்ஷமடைகவென்று சிவன்சொன்ன தென்னையெனின், பெற்றான் சாம்பனைத் தமதன்பராகிய உமா பதி சிவாசாரியரிடத்தில் முத்திபெறுகவென்று அருளியது போலாமேயன்றிக் கண்ணனை மோக்ஷாதிகாரியென்று கொ ண்டதல்லவெனக. கண்ணன் சிவதீக்ஷாபராயண சிவபெருமா னிடத்து அன்புபூண டொழுகிவந்த வுண்மையால் அவன் பெருமைதோன்ற அங்ஙன மருளியதன்றி வேறில்லையாம். அன்றியும், கண்டாகன்னனென்பவன் பஸ்மருத்ராக்ஷ பஞ் சாக்ஷர சம்பந்தங்களால் பரம பவித்திரனாய் விளங்கினனெ ன்பது பிரமாணசித்தமாகையால் மோக்ஷார்ஹியாய் விளங்கும் அவனுக்குக் கிருஷ்ணர் முத்திகொடுத்தாரென்பது ஔபசா ரிகமேயன்றி வாஸ்தவமன்றென்க. கண்டாகன்னனையும், பெ ற்றான் சாம்பனையும் முறையே கண்ணனிடத்தும், உமாபதி சிவாசாரியரிடத்தும் முத்திபெறுகவென் றருளியதுபோல வே மூலபுருஷராகிய விஷ்ணுமூர்த்தியை ஞானசம்பந்தமூர் த்திகளிடத்தில் சிவசாரூபயம் பெறுகவென்றருளிய வுண

மையை மேலிடங்களில (உஉ) பக்கத்தில் காட்டியிருக்கின் றோமாகையால அதனைப பிரமாண பூர்வகமாயிணைடு தகரிபபாமென்க ॥ తత్ర పూర్వం మహావిష్ణుః పశ్చిమాలయసంజ్ఞితే। తపశ్చచార సారూప్యసంప్రాప్త్యై శూలినో హరిః॥ ౧॥ శాన్తో దాన్తో జితక్రోధో భస్మోద్ధూళితవిగ్రహః। రుద్రాక్షమాలాభరణో రుద్రాధ్యాయపరాయణః॥ ౨॥ హృత్పుణ్డరీకనిలయం విశ్వాక్షం విశ్వతోముఖం। విశ్వతః పాదపాణ్యన్తం విశ్వరూపముమాపతిం॥ ౩॥ ధ్యాయమానో దివారాత్రం తతాప పరమం తపః। తపసా తస్య సంతుష్టః ప్రాహ విభుర్నాయకః శూలధృక్॥ ౪॥ వత్స విష్ణో ప్రసన్నోఽస్మి వరం వరయ సువ్రత। త్వమతీవ ప్రియోఽస్మాకం పార్వత్యాశ్చ విశేషతః॥ ౫॥ ఇతి దేవవచశ్శ్రుత్వా గురురాడః ప్రీతమానసః ప్రణమ్య గిరిజాధీశం ప్రష్టవాన్వరముత్తమం॥ ౬॥ భగవన్ దేవ సర్వజ్ఞ విశ్వేశ్వర మహేశ్వర। సారూప్యం మహ్యమీశాన ప్రసీద తవ శఙ్కర॥ ౭॥ శ్రుత్వా తు వచనం దేవః ప్రోవాచ మధుసూదనం। ఇష్టం తవేష్టం దాస్యామి కాలేనైవ న చాన్యథా॥ ౮॥ వైవస్వతేన్తరే ప్రాప్తే హ్యష్టావింశతికే కలౌ। మద్భక్తస్తే హ్యసంబాధః ప్రదాస్యతి సరూపతాం॥ ౯॥ తావత్కాలం త్వగస్త్యే చ సదా కురు మహాతపః। దేశేషు యత్ర యత్రాస్తి మదాలయముత్తమం॥ ౧౦॥ తత్ర తత్ర చ సంబద్ధగుహాంశో భక్తిమాన్సుధీః। ద్రావిడత్రిశిఖాద్యాద్యాః ప్రీణయిష్యసి మాం ముదా॥ ౧౧॥ అత్ర కాంచ్యామపి వశీ స్థిత్వా మామాగమిష్యసి। అత్రాపి పశ్చిమస్థానే ద్రావిడస్తుతిభిస్సదా॥ ౧౨॥ స్తుత్వా త్వమథ మద్భక్త్యా దృష్ట్వా త్వద్భక్తిదర్శితం। ప్రీణయిష్యతి సుత్యా సౌమనస్యం ప్రపన్నం గతస్తదా॥ త్వద్భక్తగర్వనాశాయ మత్సారూప్యమవాప్స్యసి। ఇతి దేవో వరం దత్వా జగామాభీష్టమాలయం॥ என்கிற வாக்கியங்களால பூர்வத்தில கந்தபசியாலயமென்கிற விடத்தில விஷ்ணுவானவர் சாந்த சமதமாதிகளோடு கோபததைசசெயித்தவராய்ப பஸ்மருத்ராக்ஷங்கள் தரித்துககொண்டு ஸ்ரீ ருத்ரபாராயணஞ்செய்து ஹ்ருதயகமலவாசியும, விசுவாக்ஷரும், விசுவதோமுகரும், அநேகபாணிபாதரும, விசுவரூபருமான பரமேசுவரனை அகோராத்திரம் தியானித்துககொண்டு சிவசாரூப்பிய மடையும்பொருட்டு அதிகமான தவ

ஞ்செய்துகொண்டிருக்கையில் சூலபாணியாகிய பரமசிவம் அவ்வாதவத்தால சந்தோஷித்தவராய் வெளிப்பட்டு ஓ குழந்தாய விஷ்ணுவே! பார்வதி பரமேசுவரர்களாகும எங்களுக்கு நீ மிகவும் அன்பனாகையால நாங்கள பிரஸன்னமானோம் உனக்கிஷ்டமான வரத்தைக்கேளென்று திருவுளம்பற்றித லும், விஷ்ணுவானவர் மனமகிழ்ந்து சிவபெருமானை நமஸ்கரித்து, ஓ பகவானே! எல்லாமறிந்தவரும், ஜகதீசுவரருமாகிய தேவரீர் உம்முடைய சாரூப்பிய பதவியைக்கொடுததருளவேண்டுமென்று பிரார்த்திக்கவும், விஷ்ணுவைநோக்கி உன்னுடைய இஷ்டமானது காலதாமசத்தின்பேரில கொடுக்கப்படுமேயன்றி யிப்போது சித்திக்கப்பெருது. அஃதெப்போதெனின், வைவசுவதமந்வந்தரத்தில் (உஅ) வது கலியுகத்தில என்னுடைய பக்தனுகிய சம்பந்தனென்பவன் உனக்குச் சாரூப்பியத்தைக் கொடுக்கப்போகிறான். ஆகையால நீ எப்பொழுதும இவ்விடத்திலேதானே தவஞ்செய்துகொண்டிருந்தால பக்திமானுகிய சம்பந்தனை குமாரஸ்வாமி அமிசத்துடனுலவதரித்து உத்தமமாகிய என்னுடைய ஆலயங்கடோறுஞ் சென்று பக்தியுடன என்னைத்திராவிடஸ்துதிகளால ஸ்தோத்திரஞ்செய்துகொண்டு இந்தக் காஞ்சியில் பச்சிமஸ்தானமெனகிற இந்தவிடத்தில வருவான அப்போது நீ என்னிடத்தில சித்தத்தைவைத்து அவனை நன்குஅறிந்து திவ்யஸ்துதிகளால ஸ்தோத்திரஞ்செய்து உன்னுடைய பக்தஜனகர்வாபஹாரநிமித்தமாய என்னுடைய சாரூப்பியத்தையடைவாயென்று திருவாய்மலர்ந்தருளிஅந்தர்த்தானமாயினரென்றும், அவ்வாறே நிகழ்ந்ததென்றும், ஸ்காந்தத்தில், சநத்குமாரஸம்ஹிதையில், காசிகாகண்டத்தில, காஞ்சிமஹாத்மியத்தில் சொல்லப்பட்டிருக்கும் வாஸ்தவார்த்தம் வெளிப்பட்டதனுல், ஞானசம்பந்தப் பிரபுவினுடைய ஆதிக்கம்

விசேஷமாய்ப் பிரசங்கிக்கப்பட்டது. மேல்விருத்தாந்தத்தால் பக்தபராதீனராகிய சிவபெருமான் கண்ணைத் தனது பக்தனென்பதுதோன்றக்கண்டு அக்கண்ணை அவன்பால் விடுத்ததேயன்றி முத்திநாயகனென்றல்ல வென்பது இனிது வெளிப்பட்டதனால் மோக்ஷதாதா விஷ்ணுவேயென மற்று துவரும் மூர்க்கத்தன்மையை யினி யொழிவாராக. இப்படியே விஷ்ணுவால் மோக்ஷமடைந்த வொவ்வொருசரிதமும் விவகாரத்தில் அவலமாகுமென்பதுபற்றி யிவ்வளவிலே விடுத்தனமெனக. இதுகாறும் விவகரித்துவந்த நியாயங்களால் ஞானமோக்ஷங்களை யளிப்பவர் சிவபெருமானேயென்றும், விஷ்ணுப் பிரம்ஹாதிகள் அதிகாரிகளல்லவென்றும் நாட்டப்பட்டது.

இங்ஙனமிறக, அமரூசதேவி வாசகத்தில் "பல்லூழிகாலம் பயின்றானை யாசசிக்கில் - நல்லறிவு சற்றே தரும்" என்றருளிய ஔவையார் திருவாக்கால் ஞானம் சிவனால் வருமென்பது தோன்ற அவ்வாக்கியத்தை யுதகரித்தெழுதார். அந்த வாக்கியத்தால் சிவஞானசித்தியின் அருமை வெளிப்பட்டதேயன்றி விஷ்ணுவாதிக்கமொன்றுங் காணப்படவில்லை. அந்தவாக்கியத்தைச் சுருதிவிருத்தமாய்த் தானுதகரித்தமுத வேறெயவாக்கியத்திற் சாதாரமாய்க்கொண்டு வெளிப்பட்டாராகையால் விஷ்ணுவால் மோக்ஷமுண்டாமென்பதற்குபசாரணமான வேறொருவாக்கியமும் ஔவையார் திருவாக்காக வுதகரித்தல்வேண்டும். மேலியாம் விவகரித்துக்காட்டிய நியாயப்படியே பாசபந்தர்களாகிய பசுசமூகங்களி லொருவராகிய விஷ்ணுவை ஞானாதிகாரியென்றே கூறுதவராகிய ஔவையார் அவரை மோக்ஷாதிகாரியென்று எங்ஙனங்கூறத் துணிவார்? விஷ்ணுவுக்கே ஞானமென்பது உண்டோ? இல்லையோவென்று தடுமாறத்திலிருக்கவும், அவருடைய பக்தர்களுக்கு அந்த நிரதிசயஞானம் சித்திக்குமென்பது சசவிஷாணவந்தியா புத்திரககரா விருத்தவியவகாரமாய் முடியுமெ

ன்க. இங்ஙனமாகவும், ஔவையார் திருவாக்கை யாதார மாய்க்கொண்டெழுந்தது எனப்போலுமெனின், விட்டிற்பூச சிகள் தீபவொளியைத் தமக்கிதமென்றுகருதி மேல்விழுந்து சாதல்போலவும், ஓரிடையன் தனதாடெனக்கருதி மலையடி வாரத்திலுலவுங்கரடியை நெருங்கி அதற்கிரையாதல்போல வும், தன்னைக்கொல்லும்படிக் கரத்திற் கத்தியேந்திவரும் பூசாரியை ஆடானது இரைதரவந்திருமென்று மகிழுமாறு போலவுமாம். அத்தவாக்கியத்தால் சிவனுக்கே ஞானமுண் டாக்கப்பட்டதன்றி யிதர தேவதாசம்பந்தமொன்றுங் கூறின தில்லை யாகலின் ஞானமும், மோக்ஷமும் சிவனாலேயே யு டையத்தக்கதென்று அவர்கூறிய மறைவாக்கியங்களாலினி தெரிப்பாமென்க.

"எண்ணிலியூழி தவஞ்செய்த தங்கீசனை
யுண்ணிலைமைபெற்ற துணர்வு."

"ஆதியோ டொன்று மறிவைப்பெறுவதூஉ
நீதியாற்செய்த தவம்."

"பத்தியாலுள்ளே பரிந்தாலைத் தாலேசுக்கின
முத்திக்கு மூலமது."

"நல்லானைப்பூசித்த நாதனெனவுருகில
நில்லாதோ வீசனிலை."

"ஒவ்வகத்துணின்ற சிவனருள் பெற்றக்கால
அவ்வகத்து ளானந்தமாம்."

"சிந்தையுணின்ற சிவனருள் பெற்றக்கால
பந்தமாம் பாசமறும்."

"ஓவாச்சிவனருள் பெற்றாலுணாயினறித
தாவாதவினை பந்தரும்."

"சிவனுருவந்தானாய்ச் செறிந்தடங்கிநிற்கில
பவநாசமாகும் பரிந்து."

"சிந்தை சிவமாகக் காண்பவர் சிந்தையில்
சிந்தித்திருக்குஞ் சிவம்."

அழியாவுயிரை யாளுடன்வைக்கிற
பழியான தொண்டிலை பார."

என்றறெருடக்கத்து வாக்கியங்களால் ஞானமோக்ஷங்களிரண்டும் சிவசம்பந்தமாகவே பெறப்பட்டதன்றி யிதர தேவதாசம்பந்தம் அறவே நிரஸ்தமாய் விட்டதனால் விஷ்ணுவுக்கே மோக்ஷாதிக்கமுண்டென்று சாதிக்கவந்த மூடஞானம் முரண்பட்டழிந்ததெனக.

இப்பேதைகள் ஔவையார் திருவாக்குகளிற் பயின்றும் வாய்மைதோன்றுதவழி விபரீதங்கொண்டழிவதென்னையெனின், "கலைஞான பல கற்றறிந்தும் காண பரிதே - யெல்லை யிலாத சிவம்" என்று எமதன்னையார் கூறிய வாய்மை வெளிப்பட்டதன்றியும், தீக்ஷிதஸ்வாமிகள் திருவாக்குண்மையையுஞ் சிந்திப்பாராக.

## சிவதத்துவவிவேகம்.

"త్వయి శ్రద్ధానాథ ప్రవచనబలాన్నైవ సులభా సమేధా బాహుళ్యాన్నచ వివిధశాస్త్రేషు ఘటనాత్ । ప్రసాదాదేవైనాం ధవళవలభ స్తే సుకృతిన స్తనూ స్తేదుర్దాన్తాః కథమివలభేరన్ కుమతయః"

"உன்றிருவடிக்கீழுறுதியா மன்புமுன் றிருவருளினாற் கிடைப்பதன்றி நூற்பலவுமாய்ந்ததாலுஞ் செய்யப்பருந்திறமையான மதியானான்றேனும் கிட்டப்பதன்று மற்றதனை மாதவஞ்செய்திலாக்கயமை [ன்] தன்றியபுலையோர் யாங்ஙனம்பெறுவர்சோதியே கருணைவாரிதியே."

"తవ శ్రీపాదాబ్జైక ధనపిదధద్భిర్న సుఖాని హ న్త్రి) దుఃఖానాం నిఖిలవృషాద్గైకవసతిః । వినాభక్త్యై వ్యర్జన్మాన్తర శతసహస్రేషు విహితైర్జనైః శ్రేయో మాత్రం ఖాయు బహుళవిఘ్నం నలభతే"

"உலகர்சேருறுதிப்பயனைவற்றினுக்கு முறைவிடமாய்த் துயர் முழுதும், விலக்குறத்தமிக்குநகணிச்சியா முன்றுள் விளாமலாக்கிய தறுமெய்ப்பதத்தி, யவளிலாப பிறவிதொறும் புரிதவத்தாலல்ல தெவராற்றினு மரிதே, நலமொன்றடைதற்குறுமிடையூறு காதனே பலவுளவன்றே."

"విధూతాన్తర్ధ్వాన్తా వివిధభవసమ్పన్న సుకృతా యతన్తే బోద్ధుంత్వాం యమనియమసత్కర్మనిరతాః । దధీచాద్యైశ్శప్తా గిరిశ దనుసూను ప్రకృతయః కథంత్వాం జానీయుః కలిమలినచిత్తాహతధియః"

"பலவகைப்பவந்தோ றெய்திநின்றதவத்தோர் படர்ந்தெழு மகத் திருள்கடிந்தோர், நலமுறு மியமநியமஞ் செய்கைநயந்துளோருனைப பெறமுயல்வோர், கலியுறு நவைச்செருள்ளத்தவ ரசுரர்க்கமையாத தீசியாதிகளா, லமர்ச்சிக்கப் பட்டுளோ ரெவ்வா ரறிவரோ வைய நின்றனையே."

இந்தவாக்கியங்களால் சிவஞானசித்தியின் அருமை வெளிப்பட்டதன்றியும், ததீசியாதிகளுடைய சாபத்தாற் கட்டுண்டிழியுங் கலதிகள் தன்மையும் வெளிப்பட்டது. "அவனருளாலே யவன்றாள் வணங்கி" என்று எமது பரமகுருஸ்வாமிகளருளிய திருவாக்கின்படியே பரிபாகிகள் சிந்தித்திருப்பாரென்க. இங்ஙனமாகவும், ஔவையாருடைய வாஸ்தவாபிப்பிராயம் இன்னதென்றறியாமல் மூடத்தன்மையால் அவ்வாக்கியத்தை யுதகரித்தழவந்தது விஸபுருஷமாய் விட்டதென்க.

"ధ్యేయత్వే తవసాక్షిణో మునిగణా జ్ఞానప్రదానే శుకో । వన్ద్యత్వే నిగమాస్స్వభక్తివిమతక్లాన్తౌ కృతాన్తాదయః । నిత్యత్వే భగవన్విధా మహాశిరస్స్రగ్బలస్తమాద్యన్తయోః । శ్యూన్యత్వేచ వరాహహంసవపుషౌ పద్మాక్షపద్మాసనౌ" என்றருளிய ஹரதத்தாசாரியசுவாமிகள் வாக்கியத்தால் சிவபெருமானே யாவராலுந் தியானிக்கத்தக்கவனென்பதற்கு முனிவர்கூட்டங்கள் சாட்சியும், சமஸ்தாத்மாக்களுக்கும் சிவஞானத்தை யளிப்பவனென்பதற்குச் சுகர்சாட்சியும், எல்லாராலும் வந்திக்கத் தக்கவனென்பதற்கு வேதங்கள் சாட்சியும், ஸ்வபக்தஜன சம்ஹாரணஞ் செய்பவனென்பதற்கு இயமன்சாட்சியும், நித்தியனென்பதற்குப் பிரமஹரசிரோமாலிகை சாட்சியும், ஆத்யந்தசூன்யனென்பதற்கு வராஹஹம்ஸ சரீரங்களைத்தாங்கிய விஷ்ணுபிரம்மாக்கள் சாட்சியு

மென்று நிச்சயிக்கப்பட்டதன்றியும், "ఆనన్త్యాదార్యసత్త్వాచ్ఛ్రుతి భయహరణాత్స్వల్ప సేవాదితోషా । త్యక్తస్థాదప్యపేక్షా భయహితవచనా కృత్తమత్వాచ్చశమ్భోః । సేవ్యో విష్ణూపమన్యుద్రుహిణముకునుత శ్రీదమన్దే చ్ఛదేవా । దత్త శ్రీరామవేదాః పశుశుకవాగ్నూ రాక్షసాస్సాక్షిణో నో" என்றாரிய ஸ்ரீக்ஷீகஸ்வாமிகள் வாக்கியத்தால் சப்தபத வாச்யராகிய சிவபெருமானை ஆத்யந்த ரஹிதனென்பதற்கு விஷ்ணு சாட்சியும், விசேஷகர்த்ருத்வ முடையவனென்பதற்கு உபமந்யுவான சாட்சியும், அதிசக்தியுடையவனென்பதற்கு பிரமஹா சாட்சியும், மிருத்யுபயத்தை நீக்குபவனென்பதற்கு மிருகண்டுபுத்திரர் சாட்சியும், ஸ்வல்பசேவையாலேயே சந்தோஷித்தநுக்ரகிப்பவனென்பதற்கு குபேரன் சாட்சியும், ஆபத்காலத்தி லாதரிப்பவனென்பதற்கு அமிர்தமதனம்பண்ணின தேவர்கள் சாட்சியும், யாவற்றினும் உபேக்ஷைசெய்பவனென்பதற்குத் தக்கன் சாட்சியும், அபயந்தந்து இதவசனங்கூறுபவனென்பதற்கு ஸ்ரீராமர் சாட்சியும், அதிபரமாப்தனென்பதற்கு வேதங்கள் சாட்சியுமாய்க்கொள்வாமென்றிய பசுவையும், சிசுவையும், ஸ்ரீயையும், ராக்ஷசனையும் உரியசாட்சிகளாகக்கொள்ளோமென்று பெறப்பட்டதனானும் உண்மையினின்று விளங்குமெனக. பசுவென்பது கஜேந்திரனாகிய யானை, சிசுவென்பது இரணியகுமாரனாகிய பிரகலாதன், ஸ்ரீயென்பது பாண்டவ பத்னியாகிய துரௌபதை, ராக்ஷசனென்பது இராவண சகோதரனாகிய விபீஷணனென்று நிச்சயமென்க. முன்சாட்சிகள் சிவபரமும், பின்சாட்சிகள் விஷ்ணு பரமுமாகவிளங்கலான சாட்சிகள் பலத்தைநோக்கி ஞானமோக்ஷங்க ளளிக்கும் பரமாதிக்க முடையவர் சிவபெருமானேயென்று சாதிக்கப்பட்டது.

இனியந்தத் துஷ்டவாசகத்தில், ஔவையாரருளிய நீதிசொற்களுக்குச் சைவர்கள் ஆத்திசூடி, கொன்றைவேந்தன் என்று இல்லாதபோலைத்துவழங்குகின்றார்களென்றும்,

ஔவையார் கருத்தல்லாருனல் அவ்விரண்டு புத்தகங்களின் ந்தத்தில ஔவையா ரருளிச்செய்த நீதிச்சொல லாற்றும என்று வழங்க வழக்கில்லையென்றும், இதுமாத்திரமன்றி பபுறச்சமயிகளாகிய அருகர்செய்த கணிதநூலகட்கும யானைமுகன் காப்பைச் சேர்த்திருக்கின்றாகளென்றும், தமமவர்கள சைவநூலில பிரவேசியாமலிருக்கும்போதே அருணகிரியாருக்குக கன்னதானமளித்த வில்லிபுத்தூரர்செய்த ஸ்ரீமஹா பாரதத்தில நலலாபபிள்ளை யெனபவா சிலபாடல்களைப்பாடிச சோதத்துக்கெடுத்தனரென்றும், அதுபோலவே யிபபோது ஞ சிலா கமபராமாயணததைக கெடுக்கபபாாகின்றாகளென்றும் வரியிலவந்தபடித தாறுமாருயப பிதற்றியாறுதாா

இதனை முறையே விவகரிக்குமிடத்து ஔவையாரருளிய நூலகளுக்கு ஆத்திசூடி, கொன்றைவேந்தன் என்னும பெயர்களே யுரியனவென்பதையீணடு நிரூபிபபோம. மேல பலவிடஙகளில யாம விவகரிததுக்காட்டிவந்தநியாயஙகளால ஔவையென்பவா சுத்தசிவ சங்மார்க்கமுடையாரென்பது பெறப்பட்டதன்றியும, அவருடைய உபாசனாமூர்த்தமா யெழுந்தருளியுள்ளவா விநாயகக கடவுளென்பதும யாவருமறிந்தவிஷயமென்க. அவரருளிய "விநாயகரகவல" முதலிய வுண்மைநூல்களே சான்றாமாகலின் மேலும எடுததுவிரிபபது அநாவசியமாகும். இஙஙனமாகவும, தமது சமயபபரமாய்ப பொருத்தருமஙகளைககூறி அவா செயதுகொணட நூலகளில் பேதைமதியாகிய இவாககேனிநத வீணவிசாரம்! தமமுடைய சமயநூலகளாயிருபபின ஒருவாறிசையும. இஙஙனமிற்க, "ஆததிசூடி"என்பனவாதிகள ஔவையினுடைய நூல்கட்குப் புதுப்பெயாகளாமெனின, நூலாசிரியராகிய ஔவையாரால தரபபெற்ற பழையபெயாகள் வேறேயிருத்தல் வேண்டுமே! அவைகளியாவை? அநதநூலகட்கு ஔவையாாகூறிய காப்புசசெய்யுள்கள் யாவை? அவற்றினநதத்தில ஔவையா ரருளிச்செய்த நீதிச்சொல முற்றும் என்று

வழங்கிவருமாற்றான் அவைகளை நீதிச்சொல் என்றே தனித்தனிக் கூறுவாமெனின், இரண்டையும் நீதிச்சொல் என்று வழங்குமிடத்து அவற்றின் வேற்றுமை தோன்றாது மயங்க வேண்டிவரும் காப்புகள் கூறியதில்லையாயின், அவர்க்கு நாஸ்திகத்வம் நாட்டவேண்டிவரும் காப்புகளுண்டெனின் அவைகள் எச்சமயப்பகுதியுடையன? எக்காலத்து வழங்கிவந்தன? எக்காலத்து அழிந்தன? எந்த ஆதாரவாயிலாயறப்பாலது? எல்லாந் தடையாற்றமேயன்றி யுண்மையென்பதனுக்குத் துணையுங் காணப்பெறாமையால் தாபிமானத்தால் வீண்வழக்காடத் தொடங்கிய துடைத்தனங் கண்டிக்கப்பட்டதென்க. "இயல்பலாதனசெயேல்' 'பழிப்பனபகரேல்" என்றவும் நீதிவாக்கியங்களை அந்நூன்முகத்திய பேதைப்புலவர் கண்டாரில்லைபோலும். இதுநிற்க, அந்நூல்களினந்தத்தில் நீதிச்சொல் முற்றும் என்று வழங்கிவருவதுவே ஆதியிலே வருவனவாகிய ஆத்திசூடி யென்பனவற்றைக் கற்பனைவயத்ததென்றார். இதென்னைமேதைமை? முதற்கண்வரும் "ஆத்திசூடி" என்பவற்றிற்கு மாறாகக் கடையில்வரும் 'நீதிச்சொல்முற்றும்" என்பதையே கற்பனையென்று கொள்ளக்கூடாது? ஒளவையாரருளிச்செய்த நீதிச்சொல் முற்றும் என்று பிறர்சொல்வதன்றி ஒளவையார் கூறியதல்லவாகலின் ஆத்திசூடி முற்றும், கொன்றைவேந்தன் முற்றும் என்றே வழங்கற்பாலதெனக் ள - ள - ஸ்ரீ ஆறுமுகநாவலரவர்கள் வெளியிட்ட நூல்களின் செவ்வுண்மையைப் பார்த்துணர்வாராக.

ஒளவையாரருளிய இரண்டு நூல்களுக்கும் அகரமுதலிய பன்னிரண்டுயிர்களும், ஆய்தமொன்றும், ககரமுதலிய பதினெட்டு மெய்களும், ககர அகரமாதி வகர ஐகாரமீறான உயிர்மெய்களும் முறையேவாக்கியங்களின் முதலெழுத்துக்களாய்ப் பெறப்பட்டு வழங்கிவருமென்பது சாவசம்மதமென்க. (வு) (வூ) (வொ) (வோ) என்பவைகளமொழிக்கு முத

யில் வாராமையால் (உ) (ஊ) (ஒ) (ஓ) என்னும் உயிரொலிகள் ஒத்துவந்துண்மை நோக்கி உயிர்களாகவேகூறிப் போந்தனர் (வெள) என்பது பொருளமை திரிபுறுமையால் மொழிக்கு முதலில் வாராததனாலும் அவ்வொலியொத்துவந்தும உயிரொலியொன்றுங் காணப்பெறுமையால் அதனை யறவே யொழித்துவிட்டனரென்க அன்றியும், இடையிடையே வருவனவாகிய (கௌ) (சௌ) (கௌ) முதலியன வெழுத்துக்களெல்லாமும் பயனற்றனவாயக் கழிக்கப்பட்ட வுண்மையை அந்நூல்களிற்கண்டறியாமல் மந்தமதியால் இப்பேதையைப் போலொத்த எவனோ ஒருவன் சோதகராகிய ஒளவையாரருளிச்செய்த நீதிச்சொல்முற்றும் என்பதை யொருபெரிய ஆதரவாய்க்கொண்டு புலம்பவந்தது புண்பட்டழிந்ததென்க

உள்ளபடியே சைவர்கள் "நீதிச்சொல்" என்பதைப்புரட்டி "ஆத்திசூடி"யென்பனவாதியாய வழங்கிவருவார்களாயின அந்த நூலினிடையே வருவதாகிய 'திருமாலுக்கடிமைசெய்" என்னும் வாக்கியத்தைக் கினறும் வைத்திருப்பார்களா? இந்த வாக்கியமே அவர்களுக்குப் பேதந்தராதென்றறியவும், நீதிச் சொல் என்பதுன்ன விபரீதத்துவசாய நீக்கிவிடப்பார்கள்? நீதிவெண்பா, நீதிநெறிவிளக்கம், நீதிசாரம் என்றற்றொட்டகத்தனவாகிய நூல்களிலே பயின்றுவருஞ் சைவர்கள் ஒளவையாருடைய நூல்களுக்குமாத்திரம் "நீதிச்சொல்" என்பதைத் தள்ளிவிட்டார்களென்று அறியாமையாற் குறைத்தழத்து அவதிவாசமா மொழிந்ததென்க. அரிச்சுவடி, ஆத்திசூடி, கொன்றைவேந்தன், ஸேறமுகம, உலகநீதி, வெற்றிவேற்கை, வாக்குண்டாம், முதலியநூல்கள் அவற்றிற்குரிய காப்புச்செய்யுள்களின் முதலையே யாதரவாய்க்கொண்டு வழங்கி வருமுண்மையை யறியாமல் ஒளவையார்நூலைச் சைவர்கள் புரட்டிவிட்டார்களென்று தமது பிரஷ்டத்தன்மையைக் காட்டியழுதது நிரஸ்தமாய் விட்டதென்க. இன்னும் விரிக்கிற் பெருகும்.

இதுநிற்க, அந்த துஷ்டவாசகத்தில் புறச்சமயிகளாகிய
அருகர் செய்த கணிதநூல்கட்கு யானைமுகன் காப்பைச்சேர்
த்தாரகளென்றார். அருகரைப் புறச்சமயிகளென்றபோது
தம்மை எச்சமயியென்று கருதியோ அறிந்திலம். புறச்ச
மயம் ஆறினுள்ளொன்றே பாஞ்சராத்திரமு மாகையால் அத
னை வேறு கொழிப்பது புகழ்மென்றெங்க. கணிதநூல்செய்த
வர்கள் அருகரென்று கூறினதால் அவர்கள்செய்து கொடு
ப்பதன் முன்னிருந்ததைச் சமயிகட்குக் கணிதநூலில்லை
போலும். கணிதநூன்மாத்திரமா? இலக்கணநூலு மவர்க
ளில்லையில்லை" எல்லாம் சைவர்களுஞ் சமணர்களுஞ்செய்து
கொடுத்ததன்வேறன்றி வேறில்லையாகலான் "செய்ந்நன்றியறிதல்"
என்னு ஞாயம்பற்றிச் சமணர்களுக்காகப் பரிந்து சைவர்களை
யெதிர்த்தனர்போலும். ஐயையோ இப்படியேன அன்னிய
சமயநூலில் வந்துவிழுந்து தலையுடைத்துக்கொள்ளவேண்
டும்? சிவபெருமானிடத்துத் தமிழை யுபதேசிக்கப்பெற்ற
வர் ஸ்ரீஅகஸ்தியபகவானுகவும், அவரைவிட்டுத் தமிழிக்கு
அதிகாரிகளாக வேறே யாவரைக்கூறுவது? சமஸ்தமான
நூல்கட்கும் அவரேயதிகாரியாகையால் கணிதநூலைச்சமண
ர்கள் செய்தாரகளென்றழுத்தது தடுமாறிப் போயிற்றெங்க.
நெல்லிலக்கம், பொன்னிலக்கம், எண்சுவடி முதலிய நூல்
கள் சைவர்கள் செய்ததேயன்றி வேறு சமயிகள் செய்தார்
களென் றழவங்கத்துந் தடுமாறியதெங்க. அவ்வருகர்செய்த
சூடாமணிநிகண்டில் "பிரமன்மாற்கரியோன்றனு" என்று வ
ருவதற்கென்செய்வார்? விநாயககாப்பையே விபரீதங்கொ
ண்டவர் இதனை யெவ்வாறுகொள்வரோ அறிந்திலம். எவ்வா
றுகொள்ளினு முண்மை யுண்மையேயெனக. இதுநிற்க, வி
ஷ்ணுவை இலிங்கவடிவமாய்க் குழைத்துவிட்டவர் விஷ்ணு
வை வணங்காரல்லவா? அங்ஙனஞ்செய்தவர் அகஸ்தியராக
வும். அவர்செய்த பரிய நெடுங்கணக்கின் முதலில் விஷ்ணு
ஸ்துதியை யெப்படிச்செய்திருப்பர்! சிவஸ்துதியே ஓம்நமஃ
சிவாயஸித்தம்நம:"என்று செய்திருப்பாராகவும், யாரோவொ

ருபேதை அதனைமாற்றி விஷ்ணுஸ்துதியை வழக்கிவிட்ட வா ஸ்தவம் வெளிப்பட்டதனால் நூலகளைப் புரட்டிப் பாவவழி யில் திரிந்து பிரஷ்டர்களாயக் கெடும்பாஷண்டிகள் இன்று மொன்று புத்திமான்க ளறியாமற்போகார்.

இதுநிற்க, அம்மலபந்த வாசகத்தில் அருணகிரியாரு க்குக் கன்னதானமளித்த வில்லிபுத்தூரர்செய்த பாரதத் தைச் சைவர்கள் கெடுத்தார்களென்றார். இதென்ன முழு மோசம்! கன்னதானம் பெற்றுக்கொண்டவர் வில்லிபுத்தூ ரரேயன்றி அருணகிரியாரல்லவெனக. எங்ஙனமெனின், வி லலிபுத்தூரரென்பவர் தேசங்கடோறுஞ்சென்று வித்வான்க ளையென்று அவர்களைக் காதுபங்கஞ்செய்துகொண்டு வருகை யில் ஸ்ரீஅருணாசலத்தையடைந்து அங்குள்ள வித்வான்க ளையும் வாதுக்கழைத்தகாலையில் இப்பாதகன் நம்முடைய காதுகளையறுத்து விடுவானேயென்று பயந்து சுவாமி சந்நிதி யையணைந்து கோபுரத்தின்மே லெழுந்தருளியிருந்த அரு ணகிரியாரை வணங்கித் தங்கள் குறைகளைச்சொல்லிக்கொண் டகாலையில் அவர்திருவுள்ளமிரங்கிப் பூமியில்வந்து அவனை யிங்கழைத்து வாருங்களென்று திருவுள்ளமிசைதலும் அவ் வாறே வந்தவராகிய வில்லிபுத்தூரரைநோக்கி நீர் நுமது கல வித்திறம் வெளிப்பட ஓரந்தி சொல்லும், அதனையாம் உமது கருத்து வேறுபடாது பொருள்விரிப்போம், பின்னரியா மொரு அந்தாதிசொல்லுகிறோம், நீர் எமது கருத்துக்கு மா றுபடாதுபொருள் கூறுவீராகவென்று திருவாய்மலர்ந்த ரு ளுதலும், வில்லிபுத்தூரர் "அழகரந்தாதி" நூறுபாடலை அப் போதே சொல்லுதலும், எம்முடைய சுவாமிகள் அதிலொரு வருத்தமுமின்றி யுடனுடனே பொருள்கூறிமுடித்து [1]"கந் தரந்தாதி" என்னுநூலைத் தாம் அருளிச்செய்தலும் அதிகவ ருத்தத்தோடு பொருள்சொல்லிக்கொண்டேவந்து,

1. திதத்தத்தத்தசிதசதத் திசாதைசாததுத தித்ததகிசா
ததசத்ததததித்தகி திசதிதத்தேதாதது திததிதத்தா

திதத்தத்தத்தித்தச்சை தாததிதேதுதை தாததத்து
திததததததிததித்தி தீதீததிததி தீதொததத்தே."

என்னும் (௫௪) வது பாடல் தமக்கு அறவே விளங்காமையால் சிறிதுநேரம் போற்றியகுறி மௌனஞ்சாதித்துப் பிறகு தெளிந்து தம்முடைய காதறுக்கவிருந்த இருப்புக்கொறட்டைச் சுவாமிகள் கரத்தில் நீட்டுதலும் அவர் தயாரசப்பெருந்துணைச் செல்வராகையால் அதனைத் தீண்டாமல் வில்லிபுத்தூரரை நோக்கி ஓ நண்பரே! எமக்குப் பூகத்துவேஷமில்லையாகையால் உம்மையாதொருபங்கமுஞ் செய்ய வெமக்குடன்பாடில்லாதென்றுகூறி, உம்முடைய கர்ணமானது எம்முடைய தானமாகப் பெறப்படப் பிழைத்தோடிப் போமென்று திருவாக்கருளி யனுகாரித்தனரென்று கலவி கேள்விகளில் வல்லவர்களாகிய புத்திமான்கள் பலரும் வழங்கிவருகின்றார்கள். எல்லாவித்துவான்களையுங் காதறுத்து வந்தவர் இவரைமாத்திரம் விட்டுவிட்டாரென்பது எங்ஙனமிசையும்? இவரிடத்துமாத்திரம் இரக்கம்வைத்தவர் மற்றவர்பால் கொடுமைசெய்தது என்னபாவம்? புகழை விரும்பியே தகாதகாரியத்திலுழைந்து அக்கிரமஞ்செய்துவந்தவர் எங்கள் சுவாமிகளையும் அவ்வாறு செய்வாராயின் அதிகப்புகழுண்டாகுமே! அங்ஙனஞ் செய்யாததென்னை? இவ்வேதுக்கள் பலவாற்றானும் வில்லிபுத்தூரரே கன்னதானம் பெற்றுக்கொண்டவரென்று இனிது பெறப்பட்டது.

இங்ஙனமிருக்க, தானம்பெற்றுப்போவாராகிய வில்லிபுத்தூரர் இன்றொருகண்டம் நமக்கிருந்தது தப்பிப்போய்விட்டதென்று சந்தோஷத்தினால் தம்மைமறந்தவராகி யிரண்டு நாழிகைக்குமுன் சம்பவித்த ஆபத்தையும் யோசித்துப்பாராமல் தம்மவர்களைநோக்கி இந்தச்சிவாலயம் நம்முடைய கண்ணிற்படாவண்ணந் திரைபோடுங்களென்று விதித்து அவ்வாறேபோகையில் அங்குள்ள சிவனடியார்கள் ஓடோடியுஞ்சென்று அருணகிரியாருக்கு இவ்வபசாரத்தைக்கூறுதலும் அவர்

பயந்தவராய் நடுங்கி,

"புரத்தை நகைசிக்கத்தைப் போர்வேலைக் கூறன்ற
*யெரித்தவராகுத காத வெந்தேரா— சிவாதத்புகழ்த
தேனசட்டுஞ் சோணகிரித் தேசிகனைப் போற்றும
னென்கெடுப்ப போற்று வினை"

எனனுந் திருவெணபாவை யருளிச்செயததும, சாவாடமபரதத்தோடும அகங்கரிததுச செலவராகிய விலலிபுத்தூரா இரண்டு கணகளுங்கெட்டுக் குருடராழவாராகி ஐயோ நமக்கிநத ஆபத்து சம்பவிததே! சிவாபராதத்தின கொடுமையாகுமிதுவென்று உளளம் நடுங்கி யினி யென்ன செய்வதென்று தேடி, மீண்டும அருணகிரிநாதரை யணைந்து அடியற்றபனைபோல அவர் திருவடிகளில வீழந்து வணங்கிக்கொண்டு உயயுமெநறி கேட்கவும. அவா திருவுள்ளமிரங்கி விபூதியளித்தருக கணகளை யருநகிரகித்து ஏதாவது சிவசமபந்தமான நூலொன்றுசெயது உமமுடைய அபராதததை நீக்கிக்கொளளுமென்று திருவுளமபாறறுதலும. விடைபெறறுக்கொண்டுபோயத் தமமுடைய பதியை யணைந்து சிவசம்பந்தமாக நூலசெய்தால நமமவாகள பழிப்பாாகளே! என்னசெயயலாமென்று மயங்கி ஸ்ரீமஹாபாரதம சிவோதகாஷம் விசேஷமுடையதும, ஸ்ரீகிருஷ்ண சமபந்தமுடையதுமாக விளங்கலான அதனைத தமிழில மொழிபெயர்த்து விடுவோமாயின உபயபிரயோஜனமு மாநுகூலயமாமென்று நிச்சயித்து அவ்வாறே செயதுமுடிதத வுண்மையை யறியாமல விலலிபுத்தூராசெயத பாரதததைச சைவர்கள் கெடுத்தாகளென்று விபரீதங் கூறியழுதது விருத்தமாயிற்றென்க. விலலிபுததூராசெய்த பாரதத்திலுள்ள சிவோத்கர்ஷங்களெல்லாம நலலாபபிள்ளையென்பவா சேர்த்தாரென்று அழுதார். நலலாபபிள்ளையென்பவர் வேறே தனித்துப்பாரதஞ்செய்திருக்கவும், அதனையறியாது இந்நூலில அவர் சம்பந்தங்கூறுவது பெருமபாவமென்க.

---

* எரித்தவனனென்பது அழித்தவனென்று பொருளாம.

ஸ்ரீமஹாபாரதம் சிவோத்கர்ஷப் பிரதிபாதகமுடைய தென்னும் வாஸ்தவம் ஸ்ரீதீக்ஷிதஸ்வாமிகளருளிச்செய்த "பாரததாற்பரிய சாரசங்கிரகம்" என்னும் கிரந்தத்தா லினிது பெறப்படும். இதனைப் பாஷாந்தரங்களில் யாவர் மொழி பெயர்த்திடினும் முதனூலுக்கு விரோதங் கூடாதல்லவா! விரோதிக்குமாயின் அது கற்பனையாகுமேயன்றி வேறில்லையே! ஆந்திரம், கன்னடம் முதலாகிய பாஷைகளில் முதனூலுக்கு விரோதமின்றிச் சைவவிஷயங்களை யிடம்வந்துழி யெல்லாமினிது கூறியிருக்கவும், திராவிடமாகிய வில்லிபுத்தூரார் பாரதமாத்திரம் அங்ஙனம் கூறியதில்லையென்பது என்னையகூடும்? ஸ்ரீமஹாபாரதம் பொதுநூலேயன்றிச் சிறப்புநூலன்றாமாகலின் அது சிவவிஷயங்களைக் கூறுமென்பது விசாரணீயமெனக. மேல்நியாயங்களால் வில்லிபுத்தூரார் பாரதம் சைவவிஷயங்களை யிடம்வந்துழிக் கூறிவருமென்றும், அப்படிக் கூறுகாகப் பிதமப்பியது துராஹங்காரத்தெழுந்த மூடாபிமானமென்றும் மேதாவியர் நிச்சயிப்பரெனக. இவ்வுண்மையை ஸ்ரீஆறுமுகநாவலரவர்கள் வெளியிட்ட பாரதத்தாற் கண்டுணர்க.

இதனையறியாத புலவர் சிரோமணியொருத்தர் வில்லிபுத்தூரார் பாரதம் என்று பேரிட்டதேயொழிய முழுவிரோதமாய இல்லாதனவற்றைச் சேர்த்தும், இருப்பனவற்றைக் கழித்தும், பாட்டுப்பாட்டாகவும், அடியடியாகவும் புரட்டித் தமது விபரீதத்தையே வெளியிடுவதுபோல ஒருநூலை வெளியாக்கியிருக்கின்றனர். அது முதனூலுக்கு முற்றும் விரோதமாயிருத்தலால் நவீனவியாயச் சிலவற்றைச் சேர்த்துப் பாரதத்தைக் கெடுத்த பரமபுருஷர் இவரேயன்றி வேறில்லையென்க.

"காலப்புரட்டர் மதப்புரட்டரோடு கலகஞ்செயுந்
தாலப்புரட்டர் மயிலவாகனேசன் றலஞ்சுருத்தி
காலைப்புரட்டிப் பாரதவமென்பர் தக்காரணனு
மாலைப்புரட்டும் வைணவப்புன்மத வாதிகளே"

என்னும் வாக்கியத்தை மீண்டுஞ் சிந்திக்கற்பாலதென்க. இனி அக்கவிச்சிரேஷ்டர் புரட்டிய விஷயங்களைப் பின்னர் விவகரிப்பாமாகையால் அதனை யிங்கே நிறுத்தி வில்லிபுத்தூரார் பாரதஞ்செய்யவந்த காரணத்தை அவர் நூலாதாரவு கொண்டே சற்று விசாரிப்போமாக.

"மூன்றுமாமறை முனிவருந் தேவரும் பிறரும்
பன்னுமாமொழிப் பாரதப் பெருமையும் பாரேன்
மன்னு மாதவன் சரிதமு மிடையிடை வழங்கு
மென்னு மாசையால் யானுமீதியம்பு தற்கிசைந்தேன்"

என்னுந் திருவிருத்தத்தால் மன்னும் - மாது - அவனை யன்றி உமாபதியையே புணர்த்துமன்றி, மாதவன் என்று கண்ணனை புணர்த்தாதென்க. எங்ஙனமெனின், இடையிடையே கண்ணன் சரிதமல்லவதைக் கூறுவதைக்காட்டிலும் முற்றுங் கண்ணன் சரிதமாகவேவரும் வேறு புராணங்களை யேன் சொல்லக்கூடாது? உள்ளபடியே கண்ணனிடத்தாசை யாமெனின் இது விரோதமென்க. மேலிடங்களில் யாம் விவகரித்த நியாயங்களால் சிவாபராகஸூசகமன்றாத்தமென்று வெளிப்பட்டதனால் சிவத்தியான விசிஷ்டத்தைநாடியே யிதனைக் கூறவாதமென்க. மாது - அவன் = மாதவன் என்று வருஞ் சிவவிஷயத்தைப் பின்வருங் கவியானுங் கண்டுணர்க.

"உள்ளடி விரற்றலைகள் புறவடி புறட்டினு-
னுயர்சணைக் கானமுழந்தா
டள்ளரிய ஆகவியர் தாள்வளைக ளொத்தகடி
தடமுதர மார்புகளிதோ
ளொளிவருசெங்கைபொடு முன்கைபிடர் நெற்றியொடு
சூடமென வெண்ணுபடையால
உள்ளலெனை யாளுடைய மாதவனு மாதவனு
மல்லமர் தொடங்கியுறவே"

என்னுந் திருவிருத்தத்தில் என்னை ஆளுடையமாது அவன் என்று தெளிவுபெறக் கூறியிருத்தலால் அதனைக் கண்ணன் மேலேற்றிக்கூறுவது விருத்தமென்க. ஐயோ!

பாவம்! இந்த வாஸ்தவாபிப்பிராயம் இப்பேதைகளிதுகாறு மறியாதவர்போலும். அறிந்திருப்பாராயின் மாதவன் என்பதை மாயவன் என்று மாற்றியிருப்பார்கள். இனியென்ன செய்வது மிஞ்சிப்போய்விட்ட காரியம்? வேறேவிபரீதஞ்செய்யலாமென்றால் ஒத்திதலையெடுப்பாய் நசுக்கப்படுமாகையால் அஞ்சிக் கிடப்பாராக.

இத்துஷ்டப்பேய்கள் அந்நூலில் சிவவிஷயங்களை எவ்வளவாகக் கழித்துவிடினும் உலவாக் கிழியாமென எம்மனுக்கும் பிரகாசித்தலால் இவைபோலும் பாடல்கள் அநேகமாயெஞ்சிக்கிடக்கின்றன. "புராதனுக்கும் வேதகீத புராணருபமொழிந்தவைவரு, கிராதனாகியவடிவுகொண்ட கீர்சனேஞ்சி கிரீடியும்" என்றும், "எண்ணரிய ஞானமுடை யோகியர்கள் பேசவருமெயினாபதி யானைகருளைப, புண்ணியனை" என்றும், "ஆசிறுண மறைபடியுமெண்ணிலகோடி யாகமத்தின படியுமெழுத்தைந்தெக்கூறிப், பூசினை வடிவமெலாம் விபூதியாலப் பூசியினை" என்றும், "நீறுபட்டிலங்குமெய்யாகில வொளியானெஞ்சினிலிருளகளையகறதி" என்றும், "ஆசறுகடவுளனை வருதயா தமக்குமெட்டாத, தேசவன" என்றும், "அருந்தவமுனை புரிந்தோரி விவளைபபோனமன்றா புரிந்தார் சிவசிவவென நரிபவரே" என்றும் வருவனவாகிய சிவோத்கர்ஷங்களை யிப்பேதைகள் வெளியிட்ட நூலிலே தானே காணக்கூடுமே! இதுகளை யாவர்சோத்தனர்! வில்லிபுத்தூரர் கூறியதேயன்றி வேறில்லையாகவின் இதுபோவின்னுமவாகூறிய சிவவிஷயங்களில் அடியடியாயப் புரண்டொழிந்ததும், முதலே யெடுபட்டுப்போனதுமானவற்றை மீண்டெடுத்துக் காட்டுவாமென்க.

"நீடாழியுலகத்து" என்னும் விநாயகவணக்கச் செய்யுண்முதலிய சிலவற்றையெடுத்துவிட்டுச் சாம்பிரதாயவிரோதமான வேறு செய்யுட்களை முதலிலேதானே சேர்த்திருக்கின்றனர். அன்றியும் பாயிரச்செய்யுட்களை யறவேமாற்றிவிட்டுக் குருகுலச்சருக்கத்துள்வரும் முதலாறுபாடல்களைத் தமது கவிகளுடன் சேர்த்துப் பாயிரமாக்கிக்கொண்டனர்.

'பாவருந்தமிழாற் பேர்பெறுபனுவற் பாவலர்பாதிரா விரவின்
மூவருநெருக்கி மொழிவிளக்கேற்றி முகுந்தனைத்தொழுதநன் னாடு
தேவருமறையு மின்னமுஞ்சாற்றுஞ் செஞ்சடைக்கடவுளைப்பாடி
யாவருமதித்தோர் மூவரிலிருவர் பிறந்தநா டிந்தநன் னாடு''

என்னும் பாடல் பாயிரத்ததாகவும், இது அவர்க்கென்னதோஷஞ் செய்ததாகவோ முதலே போக்கிவிட்டனர்.

''ஆக்குமா றயனு முதலாக்கிய வுலகைக்
காக்குமாறு செங்கணிறை கருணையங் கடலாம்
வீக்குமாற ருமையை வீந்த நாளுமீளப்
பூக்குமாமுதல் செல்வனவன் பொன்னடி போற்றி.''

என்றுவரும் குருகுலச்சருக்க முதற்செய்யுளில் "மீளப் பூக்கு மாமுதல் செல்வனவன்" என்பதை "உந்திபூக்கு மாமுதல் செல்வன்" என்று மாற்றியிருக்கின்றனர். அந்தப்பாட்டில் ஒருவனையே பிரம விஷ்ணு ருத்திரர்களாக்கூறி அவர்களை அதீதப்பட்ட நான்காவதுமூர்த்தியைத் துதித்திருக்கவுஞ் சற்றேனும் பயமின்றிக்கூறியதுகூடவென்று குற்றத்திற்கிடனுய மீண்டு கண்ணனையே கூறியதாக அழவைத்தது பாழாய்விட்டதென்க. இதனை விரிக்கிற்பெருகும். அன்றியும், சபாபருவம் இராஜசூயச்சருக்கத்தில் கசச-வது பாட்டை நவீனமாகச் சேர்த்தனர் அது இடையர்களை வியந்ததாகக் காணப்படுகின்றது. இதனால் அப்புலவர் சிரோமணியாரை இடையரென்று சொல்லவேண்டிவரும். ஆயினும் அவரை யாமிடையரென்றுகொள்ளேம். அவரிடையராயின் இப்படிப்பட்ட விபரீதங்களின் முயலுவாரா? இடையராகவே பொதுத்தருமங் கூறுதல்வேண்டும். அஃதின்மையின் அவரை இடையரென்பது யாண்டு மிசையாதென்க.

'சொச்சையிடையர் மகளிருக்குங் கூத்தக் தனித்த நவநீதப்
பிச்சைதருக மிலனெமக்கு முன்னே பூசைபெறுவானும்
இச்சைமறையின் முறையனுநற் றருமம் புரிந்தமகமென்னும்
செச்சைவடிவேல் முடியரசர் செங்கோலென்னுந் திருவெனனும்.''

என்னு மிகக்கவியாற் கண்டுணர்க. இனி ஷ சருக்கம் ௧௯௨, ௧௯௩, ௧௯௪ - வது பாடல்களையுந் திருத்தியிருக்கின் றனா.

"ஐவகைவடிவா யெங்குமாய்நின்ற
வச்சுதனமலனானந்தன்
செய்யொளிக்கமலம் பங்கயக்கண்ணனைத்
திருமகள்கொழுநனைக் காணத்
துய்யசெய்தவத்துத் துருவாசமுனிவன்
சேறலுஞ் சுடர்கொள்வைகுந்த
மெய்யுறுகோயிற் றுவாரபாலகரவ்
வேதபண்டிதன் றனைவிலக்க."

"விலங்கிய விருவர்சமமையுமந்த
வெருஞ்சின முனிவரன் வெகுண்டு
துலங்கியகோயிற் றுவாரமவிட்டவணி
தோன்றுமின் போயெனச் சபித்தா
னலங்கலந் துளவ மௌலியானருகே
டந்தனன் றனையெதிர்கொண்டு
கலங்கிய துவாரபாலர் நின்சாபங்
கடப்பதெக்காலமோ வென்றார்."

"என்றலுமுனிவன் பரிந்திவரொழுகா
வின்புறு மன்பராயவருந்
லன்றிமும் மடங்குபகைவராய் வருத
லெலைதிக சனப தமனுக்கா
மன்றலந் துளபமாலையா னென்ன
மலர்மகண மகிழ நருமவனாக
கன்றியமறையோன் சாபநீக்கடக்குற
கருத்தமறியாது கொலென்றான்."

இவற்றுள் முதற்பாட்டில் "பங்கயக்கண்ணனைத் திருமகள் கொழுநனைக்காணத், துய்யசெய்தவத்துத் துருவாசமுனிவனுஞ் சேறலும்" என்பதைமாற்றி "பங்கய சரணஞ்சிந்தனை சிந்தையனுசித, துய்யமாதவத்துத் துருவாசமுனி தொழவருகாலை" என்றும், மூன்றாவது பாட்டில் "என்றலுமுனிவன் பரிந்து" என்பதைமாற்றி "என்றலுமுனியுந் தொழுது" என்றுந்தமது கருத்துக்கி

சைந்தவரெல்லாம் எழுதியிருக்கின்றனர். இப்படி முழு மோசஞ்செய்வாரிவரையன்றி வேறேயாமகண்டிலம். துர்வாசமுனிவர் சிவாமசபூசகராகையால் விஷ்ணுவைத் தொழவந்தாரென்பது விருத்தமெனக. அவரைக் காணவந்தாரென்பதே அமையும். தொழவந்தவரின் சாபம் துவாரபாலரைப் பற்றுதாகலின்னென, காணவந்தவரெனவே, சமதைவிளங்கி விஷ்ணுமூர்த்திக்கும் அவரின் சாபம் பலிக்குமென்பது தோன்றுதலால் துவாரபாலரைப் பற்றியதென்பது நிர்ப்பாதகமாய்ப்பெறப்படும். பக்தர்களைப் பக்தர்கள் சபியாரல்லவா? துவாரபாலர்களும் முனிபுங்கவரும் விஷ்ணுபக்தர்களாயின் ஒருவரையொருவர் விலக்கினரென்பதும், சபித்தாரென்பதும் அவஸ்தையாய் முடியுமெனக. சாபமெல்லாம் ஒருவரிலொருவர் வேறுபட்டவர்க்கேயாகலின் துவாரபாலர்கள் விஷ்ணுபக்தர்களும், தூர்வாசமுனிவர் சிவபக்தருமாய்க்கொண்டு சிவபக்தர்கள் விஷ்ணுபக்தர்களை மதியாராகலின் துவாரபாலரை நோக்காது முனிவர் உள்ளே சேறலும், அசூயையால் முனிவரைத் துவாரபாலர்கள் விலக்கினரென்றும், முனிவர் கோபித்துச் சபித்தனரென்றுங் கொள்ளவேண்டிவரும். ஆகவே, முனிபுங்கவருடைய சாபவலியிற் றடுமாறிப் பிறந்துழலு மவுணர்களாகித் துவாரபாலர்கள் பட்டொழிந்தாரென்பது பெறப்பட்டது. இதுபோலவே சிவபக்தர்களால் விஷ்ணுபக்தர்கள் காவப்பங்கடைந்த விருத்தாந்தங்களை மேலிடங்களில் ஏராளமாயுரைத்திருக்கின்றேமாகையால் மேதாவியர் கண்டறியாமற் போகார். இந்தநியாயங்களால் "முனியுந்தொழுத" என்று மூன்றாவதுபாடலில் மீண்டுங்கூறியது மூடத்தன்மையாயிற்றெனக். இதுநிற்க, இடையேநின்ற பாடலில் "அலங்கலந்தனைமௌலியானது கேட்டந்தணனறனை யெதிர்கொண்டு" என்று வருவதனானுந் தொழவந்தாரென்றழவந்தது தூரமாய்விட்டதென்க. சமானமானவர்களையே யெதிர்கொள்வதனையிக் கீழ்ப்பட்டவர்க்கு அமையாதாகலின் முனிவர் தொழவந்தாரென்ப

நின்றுந் தோல்வியடைந்ததென்க. "எதிர்கொண்டு" என்னும் விசேஷத்தால் துவாரபாலரைச் சபித்தமுனிவர் நம்மையும் எங்கே சபித்து விடுகின்றாரோ என்று பயந்துவந்ததாய நிச்சயமேயன்றி வேறில்லையென்க. ஏனெனின் முன்னொருகால அம்முனிவரா லுதையுண்ட ஞாபகமுடையராகலி னென்க. முனிவரைக் கீழிட்டவராகக் கொள்வோமாயின் "எதிர்கொண்டு" என்பதைமாற்றி "வரவெழுந்த" என்று கூறுதலவேண்டும். அப்புலவர் சிரோமணியாக்கிதுதோன்றாமல் விடுத்தமை தெய்வீகம விளங்கவேண்டி யிருந்ததனென்க. இன்னும் விரிக்கிற்பெருகும்.

இனி, ஆரணியப்பருவம், தவநிலைச்சருக்கம் ௩௭-வது பாடலில் "புள்ளூடகொடியோ திருவருகானுப புண்ணிய பொருப்பிடைத் தவஞ்செய, வல்லல்" என்பதை மாற்றி "புள்ளுடைக்கொடியோ னருமுனைமபங்கன பலவெளிப்ப பொருப்பிடை" என்று எழுதியிருக்கின்றனர். இப்படியும் பேதைகளுண்டா? தொன்றுதொட்டு வழங்கிவரும் பூர்வப் பிரதிகளுக்கு மாறாக இவரெழுதிவிட்டதினாலேயே அது போய்விடுமா? அதனுடன்போகாமல் இவருடைய விபரீதமும் வெளிப்பட நேர்ந்ததே! பிரமவிஷ்ணுக்களுக்குங் காணுதற்கரிய பெரிவனிருக்கையை அருச்சுனனடைந்தானென்னும் அருமையை நோக்காது தமது கவித்தன்மையைக் காட்டவந்தாரோ! என்ன பிரயோசனங்கண்டார்? இதுமட்டோ, ஷை சருக்கம் ௭௮-வது பாடலையும் அறவே போக்கிவிட்டனர். தோஷங்களைப் பரிகரிக்கவேண்டியது ஸ்வதர்மமாதலாற் றுணிதலையேற்றுக்கொண்டனர்போலும், ஐயோ பாவம்! இவர்க்கேனிந்த வீண்கொடுமை? சமணபௌத்தாதிகளும் இதனை நோக்கினை வருந்துவார்களே;

"போகமாயவிருந்தும் போகியாயப்பரந்தும
புலன்களின் வழிமனஞ் செலுத்தா
யோகியாயிருந்தும் யோகிகண்முதலா
முனைப்பரும் பலபொருளாயு

மேகமாய்நின்ற தத்துவமறைக்கு
மெட்டுதற்கரியதன் வடிவிற
பாகமாய்விளங்கும் பைந்தொடியுடனே
பரிவுடன் இன்மொழி பகர்ந்தான்"

என்னும் பாடலே அதுவாகலான் மேதாவியர் சிந்தித்துப்பார்ப்பாராக. இப்படியே, அஎ - வது பாடலையும் போக்கிவிட்டனர். இவ்விபரீதமே யிவர்க்கு நித்தியாநுஷ்டானமும்போலும். பாவம்பாவம்!!

"ஓரோனந்தனைத்தேட வொளித்தருளுமிருபாதத்
தொருவனந்தப்
போரோனந்தனைத்தேடிக் கண்கண்டுடன்புறப்பட்டான்
புன்கசளைலாரு
சீரோனலவிலை கிரிக்குத்த தேவதையாங்குழவியையுஞ்
செங்கையேந்திப்
பாரோனையுவகையொடு தம் பணிவுடனேபுகழ்ந்திட்டதன்
பத்தினிவந்தாள்"

என்னும் பாடலாற் கண்டுணர்க. அதிலுள்ள நயத்தை நோக்கினால் இவ்விபரீதத்துக் கிடமுண்டாகாதே! ஐயையோ! இதுகலிமான்மியமென்க.

இன்னும் ஷை சருக்கம், கoஎ - கoஅ - ககசா - ககஎ - ககஅ - வது பாடல்களையும் போக்கிவிட்டனர்

"விண்ணிலுறைவானவரில் யாரடிபடாதவர்
விரிஞ்சனரியே முதலினோர்
மண்ணிலுறைமானவரில் யாரடிபடாதவர்
மனுக்கள் முதலோர்கள் தலைக்
கண்ணிலுறைநாகர்களில் யாரடிபடாதவர்கள்
கட்செவிமகீபன் முதலோர்
எண்ணில்பல யோனியிலுமியார் வடிபடாதன
இருந்தழியிருந் தழியரோ."

"வேதமடியுண்டன விரிந்தபலவாகம
விதங்களடியுண்டன வொராம்
பூதமடியுண்டன விராழிசைமுதற்புகல்செய
பொழுதொடுசெல்லும் பலபொருளின

ரிக்கலந்தது வாய்மொழிப்புச சிலையாலடித்த கதையாய ரூ
டிந்ததெனக

## திருவிளையாடற்புராணம்.

"பாண்டியன் முதுகிற்பட்டது செழியன்
பன்னி யருடம்பினிற் பட்ட
தாண்டகை யமைச்சர் மேனிமேற் பட்ட
தரசிளங் குமரன்மேற் பட்ட
தீண்டிய கழற்கால் வீரர்மேற் பட்ட
திவுளிமேற் பட்டது பருமம்
பூண்டவெங் கரிமேற் பட்டதெவ் வுயிர்க்கும்
போதன்மேற் பட்டவத் தழும்பு"

"பரிதியு மதியும் பாம்புமைங் கோளும்
பன்னிறம் படைத்த நாண்மீனு
மிருநிலம் புனல்கா லெரி ககனமல்லா
னெண்ணுமைம் பூதமுங் காருஞ்
சுருதியு மாறு சமயவா னவருஞ்
சுரர்களு முனிவருந் தொண்டின்
மருவிய முனிவர் கணங்களும் பட்ட
மதுரைநா யகனடித் தழும்பு."

"வானவர் மனிதர் நாகர்புள் விலங்கு
மாசுணஞ் சிதலெறும் பாதி
யானபல் சாதி மலைமரங் கொடிபுல்
லாதியாஞ் சராசரப் பட்ட
வூனுடைக் கருவும் பட்டன தழும்போ
டுத்தன வுயிரிலா வியமுந்
தானடி பட்ட சராசரந் தடங்க
டமைக்குயிரா யினோன் றழும்பு."

"தண்ணெனு மாயோன் விழித்தனன் கமலச்
சோதியு மயர்த்தனன் வியந்தான்
விண்ணவர் பெருமான் வெருவினன் வானோர்
வெருளார் மெய்யயனிப் படைந்தார

வண்ணயாழியக்கர்சித்தர் சாரணர்தம்
    வடுப்படாவுடம்பினிற் பட்ட
புண்ணையாதென்று தத்தமிற்காட்டி
    மயங்கினர்புத்தர்தவா றறியார்."

என்னும் பிரமாணத்தால் ஸ்ரீமந் மாணிக்கவாசக சுவாமிகள்பொருட்டுப் பாண்டியனால் பிரம்படிபட்டு எல்லாவுயிர்களிலுந் தாம் கலந்துநின்ற வுண்மையைக் காட்டினரென்பதும் சர்வப்பிரசித்தியாமே! சிவபெருமானுக்குரிய விசேஷணத்தை யிப்பேதைப்புலவர் மாற்றிவிட்டதனாலேயே அது போய்விடுமா? இப்படிப் பிரசித்தமான பிரமாணங்களெல்லாம் வெட்டவெளியாய் விளங்கிக்கொண்டிருக்கவும், அவற்றைநோக்காது பேதைமையா லுழல்வதென்னை? ஆச்சரியம்!! ஆச்சரியம்!! இது கலிகாலமெனக.

இன்னுமிவ்வாறே ஷ சருக்கம (கஉஅ) வது பாட்டில் "அந்தமில்லிசட்னு மப்பனைப்பதம்பணிந்த" என்பதை "அவனைப் பதம்பணிந்த" என்றும (கஉ௯) வது பாட்டில் "ஐயனுமம்மையேயோட்டருள்புரிந்த" என்பதை "அம்மையேயோட்டருள்புரிந்த" என்றும் அவற்றால் எவ்வளவோ தமக்குச் சிலாக்கியமிருந்துவிட்டதுபோல மாற்றியிருக்கின்றனர். அப்படி யெழுதினதால் பொருள்வேறுபாடில்லாவிடினும் அன்புவழியைமாற்றுகின்றது. அவன் என்பது இடமவந்தழி அழகுசெய்யுமாயினும் ஈண்டுக்கூற வந்தவரழகைக்கூடாது காட்டுகின்றது. ஐயனும், அம்மையும் என்றும், அத்தனும், அன்னையும் என்றும், பிரானும், பிராட்டியும் என்றும், பரனும், பரையும் என்றும், அழகுபெறவருமந் நம்மைப்போன்றோர் வேறென்செய்வார்! இருக்க அழகையவரே அடியிற்றேன்றும? அதனாலெமக்கொரு பாதகமுமில்லையெனக. இன்னும் பலவுளவற்றை விரிவஞ்சி விடுத்தாமென்க.

இங்ஙனமிருக்க, மேலிடங்களில் பிரஸ்தாபிக்கப்பட்டவராகிய எழும்பூரிலெட்டியுந் தனது மலபக்தவாசகத்தில் பார

த்விஷயத்தைச் சற்றே விவகரித்தெழுதுநாம். அது, பகவத்கீதை - ஹரிவம்சமுதலிய விஷ்ணு மாஹாத்மியமுடையதாதலால் சிவசம்பந்தமிறச்சொல்லுவது பிசகென்றும், சிவகீதை முதலியன பாரதாதி கிரந்தங்களில் வராததன்றியுஞ் சங்கராசாரியர் முதலியவர்களால் வியாக்யானஞ்செய்யாமல் விடப்பட்டதென்றும், மோக்ஷதர்மத்தில் விஷ்ணுபரமும், விஷ்ணுமாஹாத்மியம், வைஷ்ணவ தர்மமுதலிய அநேகவிஷயங்கள் சொல்லப்படுதலால் பாரதம் விஷ்ணுபரமேயென்றுஞ் சாதிக்கவந்தார் இவர்கள், பகவத்கீதாவிஷயத்தைப் பின்னர் விவகரிப்பாம். ஈண்டுப் பாரதத்தில் காரத்தில் சிவகீதை வரவேண்டியதென்னென்' றெதிர்க்கின்று மயங்களை விளக்கிறோம்போதும் அருமை அருமை!' பாரதக்கில் வந்ததனால் பகவத்கீதை சிறந்ததென்றும், பாரதத்தில் வராமையில் சிவகீதை தாழ்ந்ததென்றுங் கொண்ட அவரோ ழுமதிக்கு விசனப்பட்டுக்கொண்டிருக்கின்றது பகவத்கீதை இதிஹாசத்திலுள்ளதாலும், சிவகீதை புராணத்திலுள்ளதுமாகிய வுண்மையையுற்று நோக்கினால் உத்கர்ஷ அபகர்ஷங்கள் வெளிப்படுமாகையால் புராணஞ் சிறந்ததோ இதிஹாசஞ் சிறந்ததோவென்றும் விசாரமாண்டு அத்யாவசியமாகின்றது விரிக்கிற்பெருகும் வேதத்தின்வழி நூல்களாகிய ஸ்காந்தம், பாத்ம முதலியவற்றுள்ள நம் சிவகீதையைச் சார்புநூலாகிய பாரதத்தில் வராமைகொண்டிழிவு கூறவந்தது என்னபேதைமை! பாரதத்தில் வருவனவெல்லாஞ் சிறப்புடையனவாயக் கொள்வோமெனின், நளன்கதை - இராமன் கதை முதலியனவும் வந்ததலால் அவற்றையும் பகவத்கீதையோடொப்ப உபசரித்தல்வேண்டும் இராமன் கதையைப் படிக்காதவரில்லையெனினும், நளன்கதையைத் தானியார் பாராட்டாதவர்கள்? சமீபிச்ச வொவ்வொருவரும் பாராட்டியே திரிகின்றார்கள். இரண்டும் ஒப்பு ஒப்பு!! பாரதத்தில வந்ததினாலேயே சிறந்ததென்றும், வராது விட்டதினாலேயே

ஏவகாரஸாக்ஷாத்பதங்கள வையர்த்தமாயவிட்டதென்க. பாரதமொன்றேயன்றி வியாசஸ்மிருதி, வியாசசூத்திர முதலியனவும வியாசகர்த்ருகத்வமாய விளங்குமதலி னென்க. அன்றியும், இதிஹாசபதத்திற்கு ஸ்ரீமஹாபாரதம ஆத்தமானதுபோலவே ஸ்ரீமத்ராமாயண முதலியனவும ஆத்தமானதால வேதோபப்ரும்ஹணங்களுக்குள் பாரதமொன்றிற்கே உத்தமத்வஞ் சாதிக்கவந்ததும வியபிசாரதோஷத்தாலழிந்ததென்க. மேலிரண்டு ஹேதுக்களாலும இதிஹாசமே சிறந்தது, பாரதமே உத்தமமானது என்று கூறிய வீண்வாதம வியர்த்தமானதால மேலும அவர்கூறிய நியாயங்களை விசாரித்துக் கண்டிப்போமாக.

பாரதமே உத்தமமானதென்பதற்கு ஆதரவாயச் சங்கராசாரியர், இராமானுஜாசாரியர் முதலியவர்கள் தாங்களியற்றிய ப்ரும்ஹஸூத்ரபாஷ்யங்களிலே பாரதவாக்கியங்களை பதேபதே யுதகரித்திருக்கின்றார்களென்றும், தீக்ஷிதரவர்கள இராமாயண தாத்பரிய சாரசங்கிரஹமசெய்ததுபோலவே பாரததாத்பரிய சாரசங்கிரஹமுஞ் செய்தனரென்றும, அப்படியே ஆநந்ததீர்த்தரென்னு மத்வாசாரியரும பாரத தாத்பரிய சாரசங்கிரஹம செய்தனரென்றும, வித்யாரணியரும பாரதாந் தர்கதமாகிய மஹோபாக்யானத்திற்குச் சாரசங்கிரகஞ் செய்தனரென்றும முறையே சொல்லிமுடித்தார். அவர் பேதமையிருந்தவாறென்னே! கொடிது கொடிது!! மேற்கூறிய பாஷ்யங்களில பாரதமேயன்றி ஸ்மிருதிகளும் உதகரிக்கப்பட்டிருக்கின்றனவே! அவைகளை இவர்பார்த்தறியாதவர்போலும். இதுநிற்க, தீக்ஷிதரவர்கள் இராமாயணத்தைப்போலவே பாரதத்திற்கும சாரசங்கிரஹம செய்தனரென்றதனால என்னசிலாக்கியம்? யாம ஆக்ஷேபித்துரைக்கவேண்டியதை எமக்கவர் ஞாபகப்படுத்தினரென்பதை நோக்கி அவர்க்குவந்தனமுஞ் செய்கின்றனம். இவ்விரண்டுமன்றிப் பாகவத தாத்பரிய சாரசங்கிரஹமுஞ் செய்திருக்கி

ன்றனர். ஆனந்த தீர்த்தரோவெனின், அவருமப்படியே பாரதத்தோடு இராமாயணதாத்பரிய சாரசங்கிரஹமுஞ் செய்திருக்கின்றார். வித்யாரண்யரோவெனின், மஹோபாக்யானமேயன்றிச் சங்கரவிஜயாதி புராணசாரசங்கிரஹங்களுஞ் செய்திருக்கின்றாராகலான் புராண அபேக்ஷயா இதிஹாசஞ்சிறந்ததென்றும், அது ஸ்ரீ மஹாபாரத மொன்றுமேயென்றும், வேதோபப்பிரம்ஹணங்களுக்குள் அதுவே உத்தமமானதென்றுந் துராபிமானத்தால் வியவகரிக்கவந்தது நிரஸ்தமாய் விட்டதெனக.

இங்ஙனமிருக்க, இதிஹாசபுராணங்களிரண்டும்வேதோபப்பிரம்ஹணங்களுக்குள் சமப்பிரமாணமாயினும் புராணமே இதிஹாசத்தைக்காட்டிலும் உத்தமமானதென்பதை நிரூபிப்போம். வேதம் முதனூலெனவும், புராணம் வழிநூலெனவும், ஸ்மிருதீதிஹாசங்கள் சார்புநூலென்றும் நிச்சயமானமையால் மூன்றும்பிரமாணமாகிச் சார்புநூலினும் வழிநூலுக்காதிக்கமும், வழிநூலினும் முதனூலுக்காதிக்கமும் ஏற்படுகின்றது. ஆகவே, சார்புநூலாகிய இதிஹாசம்பிரமாண யோக்யமென்பதுமாத்திரம் ஒப்பியமையிற்புராண அபேக்ஷயா அதிக்கிரமித்தது என்பது நிரஸ்தமெனக. என்னை? "పురాణం సర్వశాస్త్రాణి ప్రథమం బ్రహ్మణా స్మృతం । అనంతరంచ వక్త్రేభ్యో వేదాస్తస్య వినిర్గతాః" எனும் மத்ஸ்யபுராணவாக்கியத்தால் புராணங்களும், தர்மசாஸ்திரங்களும் பிரமஹாவினால் முன்னே செய்யப்பட்டதென்றும், பின்னர் அவருடைய முகத்தால் வேதங்கள் பஹிர்கதமாயினவென்றும் பெறப்பட்டதெனின், வேதங்களுண்டாவதன் முன்னர்புராணங்களைப் பிரம்ஹா செய்தாரென்பது கற்பபேதமேயன்றி நிஜஸ்வரூபமன்றெனக. எங்ஙனமெனின், ஷை புராணத்தில "వ్యాసరూపమహంకృత్వా సంహృష్టమియుగే యుగే । చతుర్లక్షప్రమాణేన ద్వాపరే ద్వాపరే తథా । తదష్టాదశధా కృత్వా భూర్లోకేస్మిన్ ప్రకాశయే । అద్యాపి దేవలోకే శతకోటిప్రవిస్తరం",

என்கிற வாக்கியத்தால் நான்வியாசரூபியாய்ப்பிரதி துவாபர யுகத்திலும் சதுர்லட்சப் பிரமாணங்களால் புராணங்களைச் சங்கிரகித்து அஷ்டாதசவிதமாய்ப்பூமியில் பிரகாசிக்கச்செய்கின்றேன், இப்போதும் தேவலோகத்தில் சதகோடிவிஸ்தாரமாய்க் கிடக்கின்றனவென்று விஷ்ணுகூறினதாகப் பெறப்பட்டதனால் மேல்பிரமஹாவினிடத்துண்டாயின வென்பது றகுமாருமே அஷ்டாதசபுராணங்களும்வியாசரிடத்துண்டாயின வென்று வெளிப்பட்டது. இன்னுமிப்படியே மச்சரூபங்கொண்டு பிரமஹாவுக்கு விஷ்ணுசொன்னாரென்றும் பலபடியாய்க் கூறியிருத்தலால் வாஸ்தவஸ்வரூபத்தைக் கிரகிப்பது புண்ணியமிருந்தாலல்லது கிடடாதெனக. "யோ బ్రహ్మాణంవిదధాతిపూర్వంయోవై వేదాంశ్చప్రహిణోతితస్మై" என்கிற மந்திரத்தால் அஷ்டாதசவித்தைகளையும், புராணங்களையும் தமது அக்கிரகுமாரராகிய பிரமஹாதேவருக்குப் பரமசிவம் கொடுத்தருளினரென்றும், "ఈశానస్సర్వవిద్యానాం" என்கிறமந்திரத்தால் சாவவித்தைகளும் சிவனிடத்திலே நின்றுண்டாயினவென்றும் ஸ்பஷ்டமாய்ப் பெறப்பட்டதனால் புராணங்களைப் பிரம்ஹாவுண்டாக்கினரென்பதும், விஷ்ணுவுண்டாக்கினரென்பதும், வியாசருண்டாக்கின ரென்பதும், மற்றைமுனிவர்களுண்டாக்கினரென்பதும் ஔபசாரிகமேயன்றி வாஸ்தவமன்றென்க அவர்களை அதிகாரிகளாகக்கூறுவது கற்பபேதத்தாலென்று நிச்சயிக்கப்பட்டது. இந்நியாயங்களால் வேதம், புராணம், இதிஹாசமுதலிய வற்றை முதனூல் வழிநூல் சார்புநூலென்றுகூறுவதில்லைசொற்பமாதக புமினமெனக. இதுகேட்கிறபெருக்கும். இதன் விஸ்தாரத்தைப் பின்னர்கூறப்படும் சிவபுராணதாமசத்வ நிராகரணப் பகுதியிற்கண்டுதெளிக.

இந்நுட்பங்களையறியாத ஷெசாஸ்திரியவர்கள் புராணங்களையெல்லாம், வேதங்கள்பின்னும் பிரம்ஹாவினிடத் துண்டாயினவென்பதை முன்னேபிறந்த மூதேவிக்கும் பின்.

னேபிறந்த ஸ்ரீதேவிக்கும் உவமைகூறித் திருப்தியடைந்தனர். ஆஹா என்னபுதுமை! புராணம் மூதேவியானால் இவர் என்னஆவார்? மூதேவிக்கு மூத்தபிள்ளையாவாரோ போலும். இவர் பாரதாதிகளை கூறிவந்ததில் அதற்கொரு ஹேதுவாய புராணத்தையுங் கொண்டாரோ! அம்மூதேவிபுராணத்தைச் சனத்தொட வேண்டுமே? கொண்டாராகில் இவருடைய நாலும் மூதேவிவாசத்துக்கிருப்பிடமானது. மூதேவி எங்கிராவிடினும் இவரிடத்திருப்பதுமாத்திரம் ஸ்வதஸித்தமேனக. முன்னே பிறந்ததெல்லாம் மூதேவியும், பின்னே பிறந்ததெல்லாஞ் ஸ்ரீதேவியுமென்று கொள்வாரேலிவர், வியாசரிடத்திலுறைமையே பிரமசூத்திரமும், ஸ்ரீமஹாபாரதமும் முன்னும் பின்னுமாகத் தோன்றினனாயத்தால் பாரத அபேக்ஷயா பிரமஸூத்திரத்திற்கும் மூதேவித்வம் சித்திக்கின்றதே! ஐயோ கொடுமை! பிரமஸூத்திரத்தை மூதேவியாக்கி இவர் எங்கே சீவித்திருப்பார்? இது கலிதோஷமேனக. திருஷ்டாந்தங்கூறுவதில் இவரைப்போல புத்திமானைக்கண்டெடுப்பது அருமை அருமை! இதுபோலவே, முன்னேபிறந்த விஷத்தையும், பின்னேபிறந்த அமிர்தத்தையும் உவமைகூறினார். விஷமோ மரணத்தைக்கொடுப்பது அமிர்தமோ மரணத்தைக்கெடுப்பது. விஷத்தையுண்டவர் சிவபெருமான். அமிர்தத்தையுண்டவர்கள் விஷ்ணுவாதிகள். விஷத்தையுண்டுஞ் சிவனிறந்ததில்லை. அமிர்தத்தையுண்டும் விஷ்ணுவாதிகள் வாழ்ந்ததில்லை. விஷத்தையுண்டாலுஞ் சிவன் சாகாதவரென்றும், அமிர்தத்தையுண்டாலும் விஷ்ணுவாதிகள்சாகிறவர்களென்றும் அவர்களுடைய நித்யாநித்யங்களை வெளிப்படுத்து முபகரணமாயவிளங்கும் விஷதிருட்டாந்தத்தை யிவராதரித்தது என்னபேதமை? விஷமும் சிவனுக்கமிர்தமாயிற்று அமிர்தமும் விஷ்ணுவாதிகட்குவிஷமாயிற்று. ஆகவே, இவர் விஷாமிர்தங்களின் ஸாதம்யங்கூறியது எற்றுக்கோவறிந்திலம்.

பரிவரோபோலும். இப்படிப்பலவுள்ளவாகலின் புத்திமான்கள் பகுத்துணர்வாராக. இப்படிச்சொல்வதனால் பிரமனிடத்துப் பின்வந்தவேதம் புராணத்திற் குறைந்ததென்பது எமது கருத்தன்றென்க. புராணத்தினும் வேதமேமுற்பட்டதென்பதை முன்னேவிசாரித்துத் திர்மானித்தோமாகையால் இவர்கூறிய தோஷம் எங்கேவேதத்துக்கு முண்டாகப்போகின்றதோவென்னும் பயத்தாலேயே இப்படிப்பரிகரிக்க நேர்ந்ததென்க. மூத்தவனுக்கும் இளையவனுக்குமிருக்கும் அன்யோன்யசம்பந்தத்தைநோக்காமல் இருவர்க்கும் பேதங் கற்பித்து ஒன்றுகிராஹ்யமும், ஒன்று அக்ராஹ்யமுமாகக் கொள்வது அவிவேகமென்க. இரண்டும் கிராஹ்யமேயாகி மூத்தவன் இளையவனென்னு முபசாரமாத்திரம் பாராட்டத்தக்கதென்க. மேல்நியாயங்களால் புராணத்தைப்போலவே இதிஹாசமும் பிரமாணமென்றும், இதிஹாசம் புராணத்திற்குச் சார்புநூலாகையால் புராண அபேக்ஷயா இதிஹாசம் தாழ்ந்ததென்றும் நிச்சயிக்கப்பட்டதனால் புராணாந்தர்க்கதமாகிய சிவகீதைக்கு இதிஹாசாந்தர்க்கதமாகிய பகவத்கீதை அதிக்கிரமித்ததென்றுகூறுந் தூர்வாதம் நிரசிக்கப்பட்டதென்க.

இனிச் சங்கராசாரியார் சிவகீதைக்கு வியாக்யானஞ் செய்யாததென்னையெனின், அவர்செய்யாததினாலேயே அதற்கொரு குறைவுண்டாமென்பது என்னபேதமை? பகவத்கீதைக்கு மாத்திரஞ்செய்தனரேயெனின், அதுவுகான் மவாதத்தைச்சாதித்துச் ஸ்வயமதத்தையனாயி இவர்கள் பாஞ்சராத்திரத்தைக் கூறினதில்லையாகலின் அந்தவியாக்யானத்தை ஆதரவாய்க்கொண்டுவந்து அவதியாய் முடிந்ததென்க. ஆண்டுபட்டியிற்று நூலதிசயமேயன்றிச் சித்தாந்த அதிசயமன்றேயெனின், சித்தாந்தவிசேஷத்தால் நூலதிசயமேயன்றி நூல்விசேஷத்தால் சித்தாந்த அதிசயமில்லையாகலான் பரம்பரம் பாஞ்சராத்திரவிகற்பமாகிய சங்கராசாரியார் வியாக்யானத்தால் பகவத்கீதையை நிறுத்தவந்தது நிரஸ்த

விணைகளு மலங்களெல்லாங் கருடதியானத்தினை
விடமொழியு மதுபோல விமலனைத்து மடையும
பண்டைமறைக ளுமது நாமுனே னென்று
பாவிக்கச்சொல்லு மதுபாவத்தைக் காணே"

என்றுவருஞ் சந்தான குரவர்வாக்கியமுஞ் சான்றுமெ
ன்க. இந்த நியாயங்களால சங்கராசாரியா சிவகீதைக்கு வி
யாக்கியானஞ்செய்யாதுவிட்ட காரணம வெளிப்பட்டதனால
அவர் சிவகீதா வியாக்கியானஞ் செய்யவில்லையேயென்று ம
நதமதியாறகுணர்ந்த மட்டிவாசகம நிரஸ்தமெனக சிவகீ
தையில ஏகான்மவாதத்தைச சாதித்து வியாக்யானஞ்செய்
வதனால தமது சித்தாநதங்கெக்கிமேயன்றிச சிறப்படையா
தென்றே அதனைச்செய்யாது விடுத்தனரெனக. அநாதிமல
முத்தராய் விளங்கும சிவபெருமான தாமேபரமென்றும,
தாமேஎல்லாமென்றும, தம்மைககாட்டிலும வேறுபதாரத
தமில்லையென்றுங கூறுவது ஸவதாமம. சங்கராசாரியா முத
லியவர்கள பாசபந்தங்களாகளின அநங்கத்தா புங்கூறுவது
பரதாமமாமேயன்றி ஸ்வதாமமாகாதெனக. அதுபற்றியே
சிவகீதாவியாக்யானம அவர்க்குப்பாதகமாயிற்றெனக இன்
னும்விரிக்கிற்பெருகும.

இங்ஙனமிருக்க, ஷை செட்டியாரவர்கள் பகவத்கீதைமு
தலிய விஷ்ணுபாரம்யங்களையும், வைஷ்ணவ தாமங்களையுங்
கூறும்பாரதத்தில சோவிரோதமாயச சிவபாரம்யங்களையும்,
சைவதாமங்களையும எப்படிக்கூறுமென்று மறுத்தார். நல்ல
முகிது. அர்ச்சுனருக்குப் பாசுபதமளித்தல், கண்ணனுக்குப்
பிள்ளைப்பேறுதவுதல், கிருஷ்ணருக்குச் சிவதீட்சை கொடு
த்தல்முதலிய சிவதருமங்களைக்கூறும பாரதத்தில விஷ்ணுத
ர்மங்கள் எப்படிவரக்கூடுமென்று அதனையெதிரிட்டுநோக
கின் மேலாட்சேபம்சிகுமாகையால அவருடைய மநதம
திக்கு விசனப்படத்தக்கதாயிருக்கின்றது.

இனி வாஸ்தவவிசாரத்தில ஸ்ரீமஹாபாரதம பஞ்சபா
ண்டவர்கள சரித்திரமேயன்றி வேறில்லை. ஸ்ரீகிருஷ்ணர் அ

வர்களுக்குத் தேசபந்துவும், ஆப்தனுமாயிருந்தபடியால் அவர்சரித்ரமிடையிடையே பாரதத்தில் சொல்லப்பட்டது. ஸ்ரீகிருஷ்ணர் சரித்ரமாத்திரமேயன்றிப் பீஷ்மர், துரோணர், அசுவத்தாமா முதலிய ஆசாரியர்கள் சரித்திரமுஞ் சொல்லப்பட்டது. ஆகவிப்படிப் பலசரித்திரங்களைக் கூறிவரும்பாரதத்தில் ஸ்ரீகிருஷ்ணசரித்திரமே ப்ராமுக்யமாகக் கூறிவருமென்பது விருத்தமெனக. பாண்டவர்கள், கிருஷ்ணர் முதலியவர்கள் உபாசகர்களேயாய்த் தங்கள் அரசகாமங்களினிறைவேறும்பொருட்டும், ஆன்மலாபத்தின்பொருட்டுமொரு கடவுளை வழிபடுவாராகலின் அவரைச் சாதசிவமூர்த்தியென்று இனிது விளக்கும். இந்நுட்பங்களையறியாமல் விஷ்ணுபாரம்யங்களைக் கூறும்பாரதத்தில் சிவபாரம்யம் எப்படி வரக்கூடுமென்று விகற்பித்துணர்த்த வீணர்தங் கண்டிக்கப்பட்டதெனக் விசேஷமாகும். விஷ்ணுபாரம்ய முதலியவற்றை அந்தந்தஸ்தலப்ரகரணங்களில் அவரையுபாசியராகக் கொண்ட அதிகாரிகள் பொருட்டுக்கூறியதெனக. அவ்வுபாசியரையுபாசகராக்கி அவர்க்குபாசியரைக் கூறுங்கால் எஞ்சலையிருத்தலால் பாரதமடங்கலும் சிவபெருமானையே பரமாப்தசாத்தியாகக் கூறுமெனக இவற்றின் விவரணத்தைப் பின்னர்க் கூறுவாமென்க.

இன்னும் ஷை ரெட்டியாரவர்கள் ஸ்ரீ மஹாபாரதத்தை ஸ்ரீகண்டாசாரியார் சிவபாரம்யங்களைச் சேர்த்து விஷ்ணுபாரம்யங்களை அங்கங்கே யெடுத்துவிட்டு அவற்றை ரூடிசெய்ய ஒரு வியாக்கியானமுஞ்செய்து சேர்த்துவிட்டாரென்றும், பங்காளவாசிகள் சத்திபாரம்யமுடையவர்களாதலால் தத்சம்பந்தமாய முந்நூறு அத்யாயங்களைக் கல்பிதாம்சமாய்ச்சேர்த்து நீலகண்டீயத்தை யாதரித்து அந்த தேசத்திலே பாரதத்தை அச்சிட்டார்களென்றும், அந்தப் பிரதியாதாரமாகவே இச்சென்னையிலும் அச்சிட்டார்களென்றும், இதுகள் பிராசீன வியாக்யானங்களோடு விரோதிக்கின்றதென்றும், பலவாறு பிதற்றியிருக்கின்றனர். இவற்றை விசாரிக்குமிட.

ஸ்ரீமஹாபாரதத்திற்குப் பிரவகதர்களாய்ச் சொர்க்க மத்ய பாதாளங்களில் முறையே பைலமுனிவர், வைசம்பாயனர், ஜைமினிபகவானுகிய மூவரையும் வியாசமுனிவர் ஏற்படுத்தினரென்றும், அவ்வாறே அவர்கள் அந்தந்த இடங்களில் அதனை வெளியிட்டதுமாத்திரமேயன்றி ஒருவராயினும் அதற்கு வியாக்யானஞ் செய்ததில்லையென்றும், பின்னர் ஸ்ரீகண்டாசாரிய சுவாமிகளென்பவர் பரமகாருண்ய நிதிகளாய் ஒரு வியாக்யானம் பிரதிபதரூபமாய்ச்செய்து வெளியிட்டனரென்றும் புத்திமான்கள் பலரும் வழங்கிவருவதற்கேற்ப அந்த ஸ்ரீகண்ட வியாக்யானமொன்றுமே இம்சேதுபரியந்தம் பிரசித்தமாயிருக்கின்றது. இதனை புணராது வாயில்வந்தபடிப் பிதற்றித்திரிவது பாவம் பாவம்!! இது மாத்திரமா? சுருதிஸ்மிருதிகளிலும் இவர்கள் பேய்க்கருத்தை விரோதிக்க அபிசங்களையும் கற்பனையென்று சொல்வார்களேயன்றி வேறில்லை. இப்படிப்பட்டவர்களை என்ன சமாதானத்தால் திருப்தி செய்யலாம்? விவேகிகளாய்ச் சத்திய பிரமாணத்திற் கட்டுண்ட புத்திமான்களுக்கே சமாதானஞ் சொல்லலாமன்றி இவரைப்போலொத்த கவிச்சிரேஷ்டர் புருகையெல்லாம் மாற்றித் திருப்திசெய்விக்க யாவராலேதான் முடியும்? இனியிப்படி வீண்புரட்டுகளாலும், விருதாபிரசங்கத்தாலும் அவலமாக்கத்தை யவலம்பித்துப் பாவத்துக்குள்ளாகிக் கெடாதிருப்பாராக.

இனி ஸ்ரீமஹாபாரதம் சிவபாரம்யப் பிரதிபாதகமுடையதென்பதை விசாரிப்பாம். துரோணபர்வத்தில் "దేవదేవ ప్రపంచాత్మా అజయోऽవినశ్వరోऽవ్యయః, సర్వరూపః భవఃజ్ఞాత్వా శంకరం యతేతం ప్రభుం, తస్మిన్నభ్యర్చ్య పీఠం కరోతి వృషభధ్వజః" என்கிற வாக்கியத்தால் தேவர்களுக்குத் தெய்வமாகியும், எண்ணக்கூடாமலிருக்கும் ஆத்மபாவமுள்ளவராகியும், குறைவில்லாதவராகியும் விளங்கும் விஷ்ணுவானவர் சிவனை சர்வரூபியாய்த் தெரிந்து மஹாப்பிரபுவாகிய அவரை இப்பிரகத்தினி

ம், பரப்பிரம்மரூபமாயுள்ளது அந்தப்பரமசிவம் என்றும், "జన్మతుః కారణాత్మానం" என்கிற வாக்கியத்தால் ஜகத்காரணமாகிய அந்தப் பரமசிவத்தை யடைந்தார்க ளென்றும், "వాసుదేవస్తుతం దృష్ట్వా జగామశరణార్థితం, పార్థేనసహధర్మాత్మా, కృష్ణస్త్రీహ్యసనాతనం, లోకాదింవిశ్వకర్మాణ మజమీశానమవ్యయం" என்கிறவசனத்தால் தர்மாத்மாவாகிய ஸ்ரீகிருஷ்ணா புராணபுருஷரும், உலகத்துக்கு முதல்வரும், உற்பத்தி நாசரகிதரும், பரப்பிரம்மஸ்வரூபருமாகிய பரமசிவத்தை அர்ச்சுனனோடு வந்தடைந்தாரென்றும்; ஆரணியபர்வம். தீர்த்தயாத்திராபர்வத்தில் "యత్రవిష్ణుఃప్రసాదార్థం రుద్రమారాధయత్పురా - వరాం శ్చసుబహూన్లేభే దైవతేషుసుదుర్లభాన్" என்கிறவாக்கியத்தால், விஷ்ணுவானவர் அனுக்கிரகம் பெறவேண்டிப் பரமசிவத்தைப் பூசித்துத் துர்லபமான அநேகவரங்களைப் பெற்றாரென்றும் இனிது பெறப்பட்டது. இப்படிப் பிரமாணிய சித்தியாய்த் தீக்ஷிதஸ்வாமிகள் முதலிய சிவாதுபூதிமானகள் சிவபாரம்யங்களை வெகுவாய் விளக்கியிருக்குமுண்மையில் அதையைக்கொண்டு மேற்படி சாஸ்திரியாரவர்கள் குழறியிருக்கும் சமாதானங்களைப் பரியாலோசிப்போமாக

பகவத்கீதையில் "రుద్రాణాంశ్శఙ్కరశ్చాస్మి" என்கிற வசனத்தால் சிவனுக்கு வாசுதேவ விபூதித்வங் கூறப்படுதலால் "మోహినాం" என்கிற வாக்கியத்தால் பிரதிபாதிக்கப்படும் சிவபாரம்யம் சமாதிக்கப்பட்டதன்று வேயில்லை யென்றும், "నారాయణాత్మకో రుద్రఃపాణ్డవేయయుధిష్ఠిర" என்கிற மோக்ஷதர்ம வசனத்தில் நாராயண = ஆத்மா = யஸ்ய என்கிற பஹுவ்ரீஹியினால் சிவனுக்கு நாராயண சரீரத்வம் கூறப்படுதலால் "జన్మతుః" என்கிற வாக்கியத்தால் பிரதிபாதிக்கப்படும் ஜகத்காரணத்வம் சிவத்துவமாகக் கூறுவது பொருந்தாதென்றும், "ఏషవిష్ణురితిఖ్యాత అదిత్యాంశశ్చహవ్యభుక్" என்கிறவசனத்தால் அக்கியினிடத்தில் சிவபராலுண்டுபண்ணப்பட்ட இவன் விஷ்ணுவென்று சொல்லப்படுவான் என்று பெறப்பட்டதனால் "యత్రవిష్ణుః" என்கிற வசனத்திலுள்ள வி

மிகுந்த ஐசுவரியத்தை யடைந்தார்கள், ஆதலால் சிவபெருமான் சமஸ்தபிராணி பூதங்களாலும் பூசிக்கத்தக்கவர் என்று பெறப்பட்டது. "శివస్య పూజ్యతే లింగం సర్వైర్దేవాసురైర్నృభిః దేవపూజితః సోవై వదన్తు ప్రతివాదినః" என்கிற வாமனபுராணவசனத்தால் சிவபெருமான் சமஸ்த தேவாசுர மநுஷ்யர்களாலும் பூசிக்கப்படுகின்றார். சிவனால் பூசிக்கப்பட்டவன் யாவன் பிரதிவாதிகள் சொல்லட்டும் என்று வெளிப்பட்டது. "యస్య బ్రహ్మా చ విష్ణుశ్చ త్వం చ శక్ర సహామరైః, అర్చయధ్వం సదా లింగం తస్మాచ్ఛ్రేష్ఠతమో హి సః" என்கிற அநுசாசநிக பர்வவசனத்தால் பிரமனும், விஷ்ணுவும், மற்றைத் தேவர்களும் சிவலிங்கப்பெருமானைப் பூசிக்கின்றவர்களானால் சிரேஷ்டர்கள் யாவர் என்று பெறப்பட்டது "తతోऽస్య సర్వస్య విశ్వస్య వామే, స్వాత్మా సమవ్యక్తమనంతరూపం, దృష్ట్వా సమీశం బహుభిర్వచోభిః, శంఖాసిచక్రార్పిత చక్రహస్తం" என்கிற துரோணபர்வ வசனத்தால் ஸ்ரீகிருஷ்ணருடைய தவத்தைச் சந்தோஷித்துப் பரமசிவம் அநுக்கிரஹார்த்தமாய் வெளிப்பட்ட அவசரத்தில் அவரது இடது பாகத்தில் சங்கசக்கரதாரியாய் அநேகவிதமான தோத்திரங்களால் துதி செய்துகொண்டிருந்த விஷ்ணுவை ஸ்ரீகிருஷ்ணர் பார்த்தருளினாரென்று வெளிப்பட்டது இவ்வுண்மைகள் மேலிடங்களில் (௭௮ ௭௯) வது பக்கங்களில் உதாஹரித்திருக்கும் ருக்சம்ஹிதா வாக்கியத்தாலும், பிரமவைவர்த்த வசனத்தாலும் விளங்கியிருக்கின்றமையால் "యత్రేశః" என்னும் வசனத்தால் பெறப்பட்ட விஷ்ணுசப்தம் மூலவிஷ்ணுவைப் பரிபாதென்று கூறிய பாதகவசனம் பரித்யஜிக்கப்பட்டதெனக. மேல் வாக்கியங்களால் பெறப்பட்டனவெல்லாமும் மூலவிஷ்ணூபாஸ்யத்வமே யாகையால் அவதார விஷ்ணுக்களுக்கு மாத்திரம் இடங்கொடுத்தது மௌட்டியாந்தகார மெனக.

இங்ஙனிற்க, அவதாரங்கடோறும் உன்னைப்பூசித்து உனக்குப் பிரீதி பண்ணுகிறேனென்று சிவனுக்குக்

கொடுத்தவரத்தைப் பாலிக்கும் பொருட்டே விஷ்ணுவான
வர் அவதாரங்களில் பூசித்தாரென்பதும். ஸ்ரீகிருஷ்ணர் பூ
சித்தாரென்பதும் பேதமையிற் பேதைமையெனக் கேட்டீங்
களில் "[illegible]" என்கிற சுருதி சித்தமான உ
பகாரத்தைச் செய்துவாயக்கூடிய பிரசங்கினமேற மாகையால்
ஸர்வசக்தியமான சர்வோபகாரத்தையுடைய சிவபெரு
மானிடத்து இராமகிருஷ்ணாதி அவதாரங்களில் செய்த ஆ
ராதனத்தாலேயே உபகாரம் சம்பவித்ததென்பது விதண்
டாவாதமென்க. வராகபுராணத்திலுள்ள வரதானம் அர்
த்தவாத மாத்திரமாகவே கிரகிக்கப்படும். அநேக சுருதிவி
த்தமாய்ப் புராணங்கூறுதலினால் பிரசம்சாபரமென்பதே
மேலோர் துணிபெனக. இல்லையெனின், சுருதி விரோதபரி
ஹாரத்தேட விடம்பெறுந கல்பனமாத்திரமாகக் கண்டிக்க
பபட்டொழியுமெனக. மலவரதானம் எனபோலுமெனி
ன், தண்ணீர்ப்பந்தரை யமைத்து நீரருந்தித் தாகந்தணித்த
பிறகு நானிங்கு நீரருந்தியிருந்தண்ணீர்ப்பந்தரை வைத்தவனுக்
குப் புண்ணியத்தை விளைவிக்கவேயன்றி வேறில்லையென்று
றும் பேதையிற் சுருக்கப்படுமெனக

இன்னும் பிரமஹத்யாராதனம்போல ருத்ராராதனமும்
தாமபரிபாலன மாத்திரமன்றி யதார்த்தமன்றென்று நயினா
இதுவுமொருவிதத்தையாம். மூலவிஷ்ணுவாலும், அவதார
விஷ்ணுக்களாலும் அந்தந்தகாலங்களில் சிவாராதனஞ்செ
ய்துவந்ததுபோல பிராமஹணர்களுந் சிவாராதனஞ் செய்
யவர்களென்பது சர்வவேத சம்மதம். விஷ்ணுவும் பிராம
ஹணர்களுந் சிவாராதனத்தை யுடையவர்களாகையால்
விஷ்ணுமூர்த்தி பிராமஹணாராதனஞ்செய்தது சிவபக்தாதி
கயத்தாலென்று வெளிப்பட்டது. துர்வாசர், நந்தி, பிருங்கி
சநற்குமாரர், அகஸ்தியர், ததீசி முதலாகிய முனிவர்களை
மூலவிஷ்ணுவே அநேக அவசரங்களில் வழிபட்டவுண்மை
களைப் பாரதாதி பிரமாணங்களால் கண்டறியலாமன்றியும்
அவர்களை அவதாரங்களில் பூசித்ததும் ஏராளமாகையால்

யத்தை யடைகின்றதென்பதை விசாரிக்கில் புடம்போடுந் தோறும் பொன்னுக்கு மாற்றுயர்தல்போலென்றும் உவமி த்துக் கூறினார் இப்படியும் பொருள் கூறுவாருண்டா? அந்த வாக்கியத்தாற்பெறப்பட்டது சிவனுடைய மேன்மையொன்னை யல்லது வேறில்லை. பொன்னானது பூஷணங்களாகக் காரிய ப்பட்டகாலத்தில் அநுபவிக்கப்படமான சிரேஷ்டபதார்த்தமாய ஆத்மாக்களுக்கு இன்பம் விளைத்தல்போல நித்யங்களமாத்தி ரமாயுள்ள பரப்பிரமஹம் உபாதாநதசரீர திவ்யமங்கள விக்ரஹதேஜோ ரூபமாய்ச் சகலீகரித்து அநுபவ வேத்யமாகி ஆத்மாக்களுக்குப் பேரின்பத்தை விளைவிக்கும் அவசரத் தவிளக்கவந்த அந்தவாக்கியத்தை வேறு பிராஹயங்கொள்வ து அசஞானந்தகாரமெனக இப்படி விசாரியாமலத்தங்க த்தை புடுக்குந்தோறும் மாற்றதிகமாகிறுப்போல என்று இராமகிருஷ்ணாதி அவதாரங்களைமேலேறிக் கூறுவதுஅ பசித்தாந்தமெனக. மச்சம், கூர்மம், வராகம், நாரசிங்க முதலிய அவதாரங்கள் முறையே முதற்புட ம், இரண்டாம்புடம், மூன்றாம்புடம் என்றிங்கி ஒன்றிலொன் று மாற்றதிகரிக்கலேவேண்டும். அன்றியு மந்த முறையே அவை புடம்போடுதற்கு வேறே யொருபுருஷனும் வேண்டு ம். முறையே யவனுடைய அவதாரமாகவே பதத்தையுங் கொள்வாமெனின், பொன்னானது பூஷணங்களாகக் காரிய ப்பட்டகாலத்தில் மாற்றுக்களில் தாழ்ந்துயர்தல்போல் எல்லா அவதாரங்களும் சமநிலையினிருக்க வேண்டியதுபோக நாரசிங்கம், ஸ்ரீராமம் முதலிய அவதாரங்களே சிறந்து மச் சம், வராகமாதிகள் அங்கீகாரமாய அபூர்வத்தை யடைக் திருப்பதால் மாற்றிக்கப் படுகின்றது தங்கத்தை புடுக்குந் தோறு மென்றவுவமையால் அவதாரங்களும் முறையே யுயர்வினதாகக் கொள்ள விடாதே முறையே மச் சமாகவும், மச்சம் கூர்மமாகவும், கூர்மம் வராகமாகவும் அவதரித்ததாகக் கொள்ளவேண்டிவரும். அங்ஙனங் கொள் வாமெனின், பரசிராமனும் ஸ்ரீராமனும் ஓர் காலத்திலும்

பலராமனும் கிருஷ்ணனும் ஓர் காலத்திலும் இருந்தவர்களாகக் கண்டோமாகையால் பாதகமுண்டாகி மூலவிஷ்ணுவினதாகவே நிச்சயிக்கவேண்டியிருக்கின்றது. புடஞாயவிசாரத்தால் ஒன்றிருந்தகாலத்தில் மற்றொன்றிருத்தல் கூடாமைபற்றியே நிரஸ்தமாயிற்றெனக. இவ்வளவிலொழியாது பரசிராமனும் ஸ்ரீராமனும் சண்டைபிடித்த கதைகளை யேராளமாயறிவோமாகையால் இந்த விகற்பங்கட்கு எங்கே சமாதானந்தேடுவது?

"ஹரிபிறந்தவதாரச்செயலெல்லாவுமரன் செயலாமாலறியாதசந்தைகூற்ற, திரிவாகுமுடலவால் சருணம்ப பிணசெயலுயிரின் செயலாகுஞ் செயத்போலும், விரிவாசமைச்சொழிலையு மெமயிறைவனருளே யிதுபடாக்கைமுன்னிலத சக்கமயிழுண்டாககுந, தரியாதன திராமனுடன் பரசுராமன் சமர்பொருதகலைதயுலகிற சாற்றுவீரோ"

என்று சிவஞானதீபத்திற்கூறியவாறு வினவப்பட்டு, பிறந்துழலும் உயிர்வாக்ந்து எண்ணப்பட்டுச் சிவனால் காரியப்படுமுண்மை வெளிப்பட்டதனால் மூலவிஷ்ணு வியாந்தவரொன்றும், அவதார விஷ்ணுக்களாயாந்தவாகவொன்றும் மலைந்து கூறியவாதங்கள் நிரஸ்தமாயிற்றென்க. இந்த நியாயங்களால் மூலவிஷ்ணுவினுடைய சிவாராதன விசேஷத்தாலேயே அவதாரங்களினும் உத்கர்ஷம் சித்தித்ததென்பதுதானே போதரும் இவ்வுண்மை விசாரமின்றி வாயில் வந்தனவந்தன குழறித்திரிவது அறியாமையும், அஹங்காரமுமாமெனக.

இதுநிற்க, ஷைசாஸ்திரியாரவர்கள் சாவசித்தாந்த பிரதியாத்யதவம் விஷ்ணுவுக்கே யுண்டென்பதை விவகரிக்கவந்தார், எங்ஙனமெனின், பாரதம், மோக்ஷதன்ம பஞ்சசித்தாந்த நிர்ணயாத்தியாயத்தில், சாங்கியத்துக்கு வக்தா கபிலனொன்றும், யோகத்துக்குவக்தா பிரமனென்றும், அபாந்தரதபா வேதாசாரியனென்றும், பிரமவுற்புத்திரரான பசுபதி பாசுபதக ஞானத்தைச் சொன்னவனொன்றும், பாஞ்சராத்திரத்துக்குவக்தா நாராயணனொன்றும், சாவக ஞானங்களிலும் பாஞ

சாத்திரஞ் சிறந்ததென்றும், சாஸ்திரப்படியும், நியாயப் படியும் நாராயணனுக் கிருஷ்டனென்றும், தமோபூதாள வனே யற்கிறதில்லையென்றும், சாஸ்திர மறிந்தவர்கள அறிந்ருாகவென்றுங் கூறியிருத்தலால நாராயண நிஷ்டத்துவம சாதிக்கப்பட்டுப பாசுபதப்பாந் சர்வசித்தாந்தப பிரதிபாத்ய அந்தரியாமிப்பிரமமாய அந்த நாராயணரொருவரேயென்று வெளிப்பட்டதென்றும், வேதத்திலும், இராமாயணத்திலும், ஹரிவமசத்திலும், பாரதத்திலும முதலிலுங கடையிலும் நடுவிலும் சொல்லப்பட்டிருக்கின்றதென்று ஹரிவமசத்தில் சொல்லப்பட்டதென்றும், வேதத்திலுயர்ந்த சாஸ்திரமும், கேசவனிலுயர்ந்த தெய்வமுமில்லையென்று வியாச வசனத்தால் சொல்லப்பட்டதென்றும் முறையே சொல்லிமறுத்தார்.

இவற்றை விவரிக்குமிடத்து மோக்ஷதன்மத்திற கூறிய நாராயண நிஷ்டத்துவம ஔபசாரிகமேயன்றி வாஸ்தவமன றென்க. அங்ஙனமென்னை, சாங்கியமுதலாகச் சொல்லப்பட்டவற்றைத் தத்தம் மதத்தும ஒன்றுமொன்று முரணியனவேயன்றி வேறில்லை. இப்பகுதியனவற்றை வேதத்தி னுண்மைப பொருளாமெனக் கொள்ளுதல் கூடாது. இவற்றுள் பாஞ்சராத்திரம் ஆதிக்கமுடையதாகக் கூறப்பட்டதேயெனின், பஞ்சராத்திரத்தாரிலொன்றுஞ் சோமையவற்றோடு சமதுலையினிப்பதொன்றுமின்றி உண்மை பயக்காதென்க. ஆகவே, இவற்றிலொன்றுசேராமல அந்தமாககமாதல வேண்டுமென்பது பொருளும். அங்ஙனமின்மையின், அதனை யுண்மை யென்பதாகக் கொள்ளப்படுதல் கூடாது. ஆயின அந்தவாக்கியத்தால ப்ராந்த ஆதிக்கத்துக்குப் போக்கேதெனின், ஏனையமார்க்கங்களைப்போல அதனாதிக்கங் கூறப்பட்டதன்றி வேதத்தின் பொருளாகக் கொள்ளப்படுஞ் சித்தாந்தமும் அதுவேயென்பது கருத்தம். சகல சமயாதீதாசைவதமாய் விளங்குஞ் சைவசித்தாந்தத் துண்மையைமேல் (ரு-சா) பக்கங்களில் விதந்துகூறியிருக்கின்றோமாகையால் ஆண்டுக்கண்டுணர்க. ஆயின்மேல வாக்கியத்தாற் பெறப்பட்ட பாசுபத்

ய மார்க்கத்துக்குப் போகதென்னையெனின், அது வாமபாசு பதா சாரமாகக் கிராஹ்யமேயன்றி உத்தரசைவத்தைப் பாதி யாதென்க. வாமபாசுபதமும், பாஞ்சராத்திரமும் மலபாகம் வராதவர் பொருட்டுப் பரசிவானுக்ஞைகொண்டு சிவகே சவர்களால் சொல்லப்பட்டன வென்றும், ஞானசீலர்க்கு அவை அக்கிராஹ்யமென்றும், சித்தாந்தசைவமொன்றே கி ராஹ்யமென்றும் பலவித்தாணுஞ் சுருதிபோதகமாயக்கூறி னுமாகையால் பாஞ்சராத்திராதிகக் கூறவந்த பண்டித திறம் பாதிக்கப்பட்டதென்க. இந்த நியாயங்களால் மேலவா க்கியத்தாற் போந்த நாராயண நிஷ்டத்வம் பாஞ்சராத்திரமா கிய சாஸ்திரப்படியும், அதிற் கூறிய நியாயப்படியுஞ் சித்திக் குமேயன்றி இதர சித்தாந்தாபேக்ஷயா சித்தியாதென்க.

இன்னும் பாசுபத்யாதி சர்வசித்தாந்தப் பிரதிபாத்யா அந்தர்யாமி பரமாய அநந்தநாராயண னொருவரே யென்றும் பிரசங்கித்தனர். விஷ்ணுவால் சொல்லப்பட்டது பாஞ்சரா த்திர மொன்றேயன்றி வேறில்லை. இதுகொண்டே சர்வசித் தாந்தப் பிரதிபாத்யத்வம் அவர்க்குக் கூறுவது என்னபேத மை? சாங்கியயோக சித்தாந்திகளும் இவ்வாறே கூறுவரெ னின் உண்மைதோன்றுவதெங்ஙனம்? ஆகவே சர்வசித்தாந் தங்களையும் சொன்னவர் யாரோ அவரே சர்வசித்தாந்தப் பிரதிபாத்ய ரென்பது சித்திக்கும். இதனால் சமஸ்த சித் தாந்தங்கட்கும் வக்தா ஒருவரே யாதல்வேண்டும். ஒன்றி லொன்று முரணிய பல சித்தாந்தங்களை யொருவரே கூறு வதென்னையெனின், ஆன்மாக்களுடைய கன்மபாகங்களை நோக்கி யங்ஙனங் கூறினதேயன்றி வேறில்லை யாகலான் பரி ராஷிகள் மயங்காரென்க. உண்மையில் சர்வசித்தாந்தப் பிர திபாத்யர் ஒருவரே யாதல்வேண்டுமன்றிப் பலமுதல்களா யக்கிரகித்தல் கூடாது. பலராகக்கூறுவது அநந்த ஸ்து திப் பிரகரணங்களில் ஔபசாரிகமாய் மூலபுருஷனுடை ய அதிஷ்டிப்பை நோக்கியே யன்றி வாஸ்தவத்தாலன்றெ ன்க. இந்த நியாயங்களால் சர்வசித்தாந்தப் பிரதிபாத்ய

த்வம் விஷ்ணுவுக்குச சமர்த்திக்கவந்தது தடுமாறியதென்க.
"అసృజత్సర్వశాస్త్రాణి మహాదేవో మహేశ్వరః, దండనీతిం ప్రయోగంచ ప్ర
మాణానిచ సర్వశః, విద్యాశ్చతస్రఃకూట స్థాస్తాసాంభేదవికల్పనా, అంగాని
వేదాశ్చత్వారో మీమాంసాన్యాయవిస్తరః, పురాణంధర్మశాస్త్రంచ వి
ద్యాహ్యేతాశ్చతుర్దశ, ఆయుర్వేదోధనుర్వేదో వేదోగాంధర్వకో త్రయః,
అర్థశాస్త్రంచతుర్థంచ విద్యాహ్యష్టాదశైవతు, దశచాష్టౌచవిఖ్యాతా
ఏతాధర్మస్యసంహితాః, ఏతాసామేవవిద్యానాం వ్యాసమాహమహేశ్వరః,
శతాని త్రింశశాస్త్రాణా మాహతిన్త్రాణిసప్తమి, వ్యాసఏవతువిద్యానాం మహాదే
వేనకీర్తితః, తంత్రంపాశుపతంనామ పాంచరాత్రంచవిశ్రుతం, యోగశాస్త్రం
చసాంఖ్యంచ తంత్రంలోకాయతంతథా, తంత్రంబ్రహ్మతులానామతర్క విద్యా
దివాకనాం" என்றற ஒருடசுகதுச சாங்கிபால வசனங்களா
ல சாவசாஸ்திரஙகளையுஞ சிவபெருமா ஞெருவரேயுண்டா
க்கிஞரென்றும, அவறறின விவரணததை நோககுங்கால் த
ணட்நீதி, பிரயோகம, பிரமாணம, கூடஸ்தம் எனகிற நாலு
வித்தைகளென்றும, அவறறினுட பிரிவுகளென்றும், வேத
ஙகள், ஷடஙகஙகள, மீமாமசை, நியாயவிஸ்தரம், புராண
ம, தாமசாஸ்திரம, ஆகியபதினலு வித்தைகளென்றும், ஆ
யுாவேதம, தநுாவேதம, காநதாவவேதம, அாததசாஸ்திர
மென்கிற நாலுவித்தைகளென்றும் விளஙகுகையால் தாம
சமஹிதைகளாகிய இவ்வஷடாத சவித்தைகளும் சிவனேவ
க்தா வென்றறியததககது. அனறியு மிகனுடபிரிவாக முந
நூறு சாஸ்திரஙகளையும, ஏழுதநதிரஙகளையும் சொலலியரு
ளிஞரென்றும, அவறறில சாஸ்திரஙகணிறக தநதிரஙகளை
நோககுஙகால பாசுபதம, பாஞ்சராததிரம், யோகம், சாங்கி
யம, உலகாயதம, பிரம்ஹறதுலே, தாககவித்தைஎன்கிற பேத
ஙகளாயப பெறப்பட்டதென்றும இனிது விளங்கும். "ఏతా
ధారాణిపురాణాని వేదాశ్చ్య ధర్మసంహితాః" என்கிற வசனத்தால்
புராணஙகளும, தாமசாஸ்திரஙகளும, வேதங்களும் ஏகார்
த்ததையுடையது. இவறறையெலலாம் மஹாதேவராகி
ய சிவபெருமானே சொலலியருளிஞரென்று பெறப்பட்ட

வுண்மையால் சாவசித்தாந்தப் பிரதிபாத்யா பரசிவப் பிரபுவாகிய அவரொருவரேயென்று சாதிக்கப்பட்டது. "సాంఖ్యం యోగః పాంచరాత్రం వేదాః పాశుపతం తథా, జ్ఞానాన్యేతాని పంచైవ జ్ఞేయశ్చైకో మహేశ్వరః" என்கிற பாதமபுராண வசனத்தால் சாங்கியம், யோகம், பாஞ்சராத்திரம், வேதம், பாசுபதம் ஆகிய இவ்வைந்தும் ஞானங்களென்றும், இவற்று லறியப்படும் ஞேயமாவான் சிவபெருமானென்றும் வெளிப்பட்ட வுண்மையுஞ் சித்தித்ததெனக. இங்கே வேதத்தையுஞ் சொல்ல வந்தது ஏனைய சித்தாந்தங்கட்கு ஆதிகாரங் கூறவேண்டியென்க. ஆகவே, வேதத்திற் பேதிக்கப்பாகங்கள் அகிராஹ்யமும், அபேதபாகங்கள் கிராஹ்யமாகி ஞானங்களென்று நிச்சயப்படும். இவ்வுண்மைகளால் சர்வக ஞானங்களாலும் பிரதிபாத்யராய் விளங்கும் ஞேயபொருளா யுள்ளவர் சிவபெருமா னொருவரேயென்று நிச்சயிக்கப் பட்டதெனக. பாரத மொன்றிலேதானே சமஸ்த சித்தாந்தங்களையுஞ் சிவன் சொன்னானென்றும், அவற்றி லொவ்வொன்றைத் தனித்தனி விஷ்ணுவாதிகள் சொன்னாகளென்றும் பேதந்தோன்றக்கூறிய தென்னையெனின், சிவபெருமான் அந்நூல்களைச் சொன்னகாலத்துப் பாஞ்சராத்திரங் கேட்டவர் விஷ்ணுவும், பாசுபதங்கேட்டவர் உருத்திரமூர்த்தியும், யோகசாஸ்திரங்கேட்டவர் பிரமஹிரண்யகர்ப்பரும், உலகாயதங் கேட்டவர் பிரஹஸ்பதி பகவானும், என்று நிச்சயமாகையால் சர்வசாஸ்திரங்களையுஞ் சிவபெருமானதாமே சொன்னவ ரென்றும், விஷ்ணுவாதிகள் அவரபால் கேட்டவற்றைத் தனித்தனிச் சொன்னவர்களென்றும், சிவபெருமானே வக்தாவென்றும், விஷ்ணுவாதிகளோ பிரவக்தாக்களென்றும் சாஸ்திர மறிந்தவர்கள் துணிந்துரைப்பரெனக. இவ்வுண்மையை யறியாமல் பாஞ்சராத்திரப் பிரவக்தாவாகிய விஷ்ணுவுக்குச் சாவசித்தாந்தப் பிரதிபாதயத்வம் சமாதிக்கவந்த சாமாத்தியம் நிஷ்பலிதமாயிற் றெனக இவற்றின் விரிவைமேல் (கூசு) (கூரு)வது பக்கங்களினும் பார்த்துணர்வாராக.

யோபநிஷத்வாக்கியத்தால் சகல வேதங்களிலும் நானே பிரதிபாதயன், வேதங்களைச் செய்தவனும் நானே, வேதங்களை அறிந்தவனும் நானேஎன்று சிவபெருமான்கூறிய வுண்மை வெளிப்பட்டதனால் ஹரிவம்சத்தாற் பெறப்பட்ட சர்வவேதப் பிரதிபாத்யம் சிவை கநிஷ்டமென்பதே சாதிக்கப்பட்டது.

இங்ஙனமிற்க, "பிரபன்னகாயத்திரி" என்னுஞ் சுவடியில் (௩௪) வது பாட்டல் வியாக்கியானத்தில் ஈடிசசூராமுதலி யென்பவன்தான் ஒரு பண்டாரத்தோடு வாதித்த காலையில், "సర్వే వేదా యత్పదమామనంతి, సర్వే వేదా యన్మహిమానం వదంతి, సర్వే వేదా యత్రైకం భవంతి" என்கிறவாக்கியத்தைக்கூறி எல்லாவேதங்களிலும் நாராயணனுடைய பதங்களையும், அவனுடைய மகிமைகளையுமே சொல்லுகின்றனவென்னு முண்மையைக்காட்டிக் கண்டித்ததாகவும், அவன்மறுத்துச்சொல்ல வகையில்லாமல் ஓடிப்போய்விட்டானென்றும் பிதற்றியிருக்கின்றனன். அந்தவாக்கியத்தில் எவனுடைய பதங்களையும் மஹிமைகளையுமென்று பெறப்பட்டவுண்மையால் அவ்வுண்மைதோன்ற, "సర్వే వేదా యత్పదమామనంతి, తపాంసి సర్వాణి చ యద్వదంతి, యదిచ్ఛంతో బ్రహ్మచర్యం చరంతి, తత్తే పదం సంగ్రహేణ బ్రవీమ్యోమిత్యేతత్" என்கிற காடகசுருதியால் சமஸ்தவேதங்களும் யாதொருபதத்தை மநநஞ்செய்கின்றதோ, சமஸ்த தபசுகளும் யாதொரு பதத்தைச் சொல்லுகின்றதோ, சமஸ்தமான பேரும் யாதொருபதத்தை யபேக்ஷித்துப் பிரமஹசர்யத்தை அநுஷ்டிக்கின்றார்களோ, அந்தப் பிரணவ வாசயமான பதத்தைச் சங்கிரஹமாய்ச் சொல்லுகிறேனென்றுகூறி, "తద్విష్ణోః పరమం పదం" என்றுமுடிவு பெறுகையினால் விஷ்ணுபதத்தைக்காட்டிலும் உன்னதஸ்தானமாகிய பரமபதம் என்று பஞ்சமியில் கிரகித்துச் சிவலோக சாம்பிராஜ்யத்தையே முமுக்ஷுக்கள் அபேக்ஷிப்பார்களன்றி விஷ்ணுபதமென்று ஷஷ்டியில் கிரகித்தும் மக்ஷிவாகனன் பதமென்று கொள்ளாரென

க. வியாபகத்தன்மையாற் கொள்வாமெனின், வியாபக சைதன்யமாகிய பரசிவப்பிரதிபாத்யம் நிரப்பாதித மாகையால் ஆண்டும் உண்மை சித்தித்ததென்க. பஞ்சமியாலும், ஷஷ்டியாலும் சிவபாரம்யமே சித்தித்ததனால் பண்டாரத்தோடுவாதித்தேனென்றும், அவன் ஓடிப்போய்விட்டானென்றும் பிதற்றவந்த துஷ்டவாசகங் கண்டிக்கப்பட்டதென்க. இன்னும், கீதையில், "వేదైశ్చ సర్వైరహమేవ వేద్యః" என்று கண்ணன்கூறினதாகவும் எடுத்துக்காட்டவந்தார். இப்படிக் கண்ணன் கூறியதெல்லாம் சோஹம்பாவனையா லென்கிற ஞாயத்தை முன்னர்காட்டி யிருக்கின்றேமாகையால் கண்ணனிடத்துச் சர்வவேதப் பிரதிபாத்யங் கூறுவது அசங்கதமாயிற்றென்க.

இத்துட னொழியாமல்தாய் செத்தபோதே குட்டிகளுக்குப் பாலில்லாமலிறக்குமாபோல் சிவனுக்குப் பரத்வத்தை நாட்டிவைத்த சமயம் நசித்தபோதே சிவனுக்குப் புத்திரர்களான கணபதி மதமாகிய காணாபத்யமும், குமாரஸ்வாமி மதமாகிய கௌமாரமும், சக்தியின் மதமாகிய சாக்தேயமும் நசித்துப்போய் விட்டனவென்று தன் கதியைப் பிறாமே லேற்றிக் கூறியிருக்கின்றனன். சிவனிறந்தாலல்லவோ அவர் சமயமிறக்கும்? அவர் சாகாதவரென்பதை அவருடைய சம்ஹாரகிருத்யமே சாக்ஷி கூறிக்கொண்டிருக்கவும் அவர்க்கு மேலொரு சம்ஹார கர்த்தாவை எங்கேதேடிப் பிடிப்பது? படைப்பும், அளிப்பும் அழிப்பிலடங்குமாகையால் சர்வசம்ஹாரகாலத்தில் பிரம்ஹ விஷ்ணுக்கள் முதலாகிய சராசர பிரபஞ்சங்களும் நசிக்குமென்பதே சத்யம். இப்படிச் சாவைத் தலைமேற்கொண்டுழலவார் சமயமல்லவோ நசிக்கும்? இராமனாகவும், கிருஷ்ணனாகவும் பிறந்து பலதுன்பத்தழுந்திச் செத்தகதைகள் பாரத ராமாயணாதிகள் கூறுமே! இன்னும் செகந்நாதமென்னும்பதியில் வேகாக் குறைக்கட்டைப் பிணமாய்க் கிடப்பதையுஞ்சென்று பிரத்யக்ஷமாய்ப் பார்க்கலாமே! இப்படிப்பட்ட இழவுகதைகளை யெங்கள் சிவசாத்திரங்களில் எங்காவது கண்டதுண்டா? இல்லையே! சிவனை

யெப்படி வேதங்கள் நித்தியராகக்கூறுமோ அப்படிப்போல
வே உமாதேவியார், கணநாதர், ஸ்கந்தர் முதலியவர்களையும
நித்தியர்களாகவே கூறுமே! இவர்களைப் பிரதிபாதிக்கும் புரா
ணங்களிலும் இராமனிறந்தான், கிருஷ்ணன் செத்தானென
பதுபோல இவர்களுக்கு எங்கும் சாவுகூறின திலலையே!
மஹிஷாசுரன், கஜமுகாசுரன், தாருகாசுரன் முதலியவர்க
ளைக்கொன்று சரஸ்வதி, லட்சுமி முதலிய தேவஸ்திரீகளுக்
குத் தாலிகொடுத்தவர்கள் இவர்களல்லவா? சத்தியலோகம்,
வைகுண்ட முதலிய பதங்களெல்லாம் இவர்கள் கடைக்கணி
ப்பாலன்றோ நிலைபெறுகின்றன! சிவனையோவிலக்கிக் கண
க்கிட்டாலும் பிள்ளையார் சேனைகளைக் கணக்கிடுவது அரி
தாமே! அப்படியன்றோ ஸ்கந்தாலயங்களும்? சிவாலயங்
களிலும் இவர்கட்குப் பூஜையாதிகள் நடக்குமே! சிவாலயங்கள்
கணக்கில் ஆயிரத்தெட்டெனினும் எண்ணிறந்தனவாமே!
விஷ்ணுவாலயங்கள் நூற்றெட்டேயன்றோ? இவற்றுளும்
திருவேங்கடம், பழமுதிர் சோலை முதலியவைகள் திருடிக்
கொண்ட ஆலயங்களாமே!—இந்த விசாரத்தால் பதினமட
க்கு சிவாராதனம் பலிஷ்டமென்பதையே யறியார்களோ? கா
ஞ்சியில் கோணங்கிக் கூத்தாடிநின்ற விஷ்ணுவுக்குச் சக்கர
மளித்தவர் விகடச்சக்கர விநாயகராமே! பிரமதேவனைத்
தலைபோட்டுச் சிறையிலவைத்தவர் ஸ்கந்தராமே! விஷ்ணு
பொய் சொன்னதற்காக மலைப்பாம்பாகச் சபித்தவர் தேவி
யாராமே! இவ்வுண்மைகளையே யறியமாட்டார்! அன்றியும்,
ஆதித்திய புராணத்தில், "దేవీస్కందగణేశాంశ్చ నందీశం వృషభధ్వజ
ం, వినాయకంచ సంపూజ్య స్తుతిభిస్తు స్తవైర్హరిః ఉవాచ...
బిల్వంచహరిరవ్యయః." என்கிறவசனத்தால் விஷ்ணுவானவர் தே
வியையும், ஸ்கந்தரையும், நந்திபகவானையும், விநாயகமூர்த்
தியையும் பூசித்து அவர்கள் பாதோதகத்தையும், பிலவத்
தையுங் கிரகித்தாரென்றும், அநேகமாய ஸ்தோத்திரங்களுஞ்
செய்தாரென்றும் செப்பட்டதன்றியும் பஹுதரமான பிரமா
ணங்கள் இன்னும் அநேகருளவாகலின் சைவமாசகமொன்

ேற சன்மார்க்கமாகி நித்தியமாயுள்ளதென்றும், தத்ஸம்பந்தமாகிய காணாபத்ய கௌமாராதிகளுஞ் சைவமேயென்றும், தத்விரோதமாகிய பாஞ்சராத்திரம், மாயாவாதம், ஆர்ஹதம முதலாகிய துஷ்டமதங்கள் அவைதிகங்களானமையா லசத்யங்களென்றும், அவைகள் அகோராசுரமாகையால் அநித்தியமாகக்கூடியவைகளென்றும், நிச்சயிக்கப்பட்டது. ஆகவே, விஷ்ணு சம்பந்தமான பாஞ்சராத்திரத்துக்கும் ஹானிசித்தித்தது. இதனாலே தாயசெத்தபோதே குட்டிகளுக்குப் பாலில்லாமற்போகும் ஞாயம் அவர்களே சமாதிக்கப்பட்டது. விஷ்ணுபுத்திரர்களாகிய பிரமனுக்கும், மன்மதனுக்குங் கோயில்கள் குட்டிச்சுவர்களாமே! மன்மதத்தனத்தை யுலகத்தவர் கொண்டாடிவருவதும் பிரத்தியட்சமாமே! இவர்களுக்காராதனை மெங்குமில்லையே, இத்தநிலையை யிவர்களித்தவர் சிவபெருமானே யன்றோ? இலக்குமிக்குத் தானெங்காவது தனி ஆலயங்களுண்டா? தேவி ஆலயங்கள் காசி முதலிய தலங்களிற் பிரசித்தமாயும் காஞ்சியிற் சரஸ்வதியும், லட்சுமியும் சாமரையிரட்டிக்கொண்டிரு மருங்கு மேவல் பூண்டுநிற்கக் கொலுவீற்றிருக்கு மாலயமும் பிரத்தியட்சமாமே! அவளை வழிபடுஞ் சாக்தேயமென்னுஞ் சமயமொன்றும் பிரசித்தியாமே! நம்பியாண்டார் நம்பிகள், ஔவை, நக்கீரர், அருணகிரிநாதர், அபிராமிபட்டர் முதலியவர்கள் மேற்கூறிய சமயங்களில்வந்த மெய்யன்பர்களாமே! இத்துணைச் சிறப்புகளையறிந்தும் அஹங்காரத்தாற் குரைத்த மட்டிவாசகம் நிரஸ்தமென்க. விஷ்ணுவுக்கு ஆலயங்களுஞ் சமயமு முண்டாயிருப்பதைச் சிவாராதனத்தாலவந்த பெருவாழ்வென்று மேலாம் பலவிடங்களிற் கூறியிருக்கின்றோமாகையால் ஆண்டுக்கண்டுணர்க.

இங்ஙனமிருக்க, ஷை சாஸ்திரியாரவர்கள் "[illegible]" எனகிற வசனமொன்றுகாட்டி விஷ்ணுவே பரனென்கிற அர்த்தத்தை விளக்கினர். அது சுருதிவிருத்தமான பூர்வபக்ஷ

வாக்கிய மென்பதை நிரூபிப்போம். "పరాత్పరతరో బ్రహ్మా, తత్పరాత్పరతో హరిః, తత్పరాత్పరతో హీశః, తస్మాత్తుల్యోధికో నహి" என்கிற பைப்பலாதத்தால் பரத்துக்குப் பரம் பிரம மென்றும், அவனுக்குப் பரம் விஷ்ணுவென்றும், அவனுக்குப் பரம் ஈசனென்றும், அவர் சமானாதிக சூனியரென்றும் வெளிப்பட்டதன்றியும் கூர்மபுராணத்தில் "న బ్రహ్మవిష్ణుసదృశం బ్రూయాద్ధృష్ట్యాపి పార్వతీం, బ్రాహ్మ్యాద్యదిసమం శంభుం బ్రహ్మవిష్ణ్వాదిభిస్సురైః, యః కశ్చిత్తామసావిష్టః కదాచిన్నైవ తం స్పృశేత్, తదా దేవీం చ గిరిజాం ద్విజ శ్రేయోర్థీ నాగ్రదేత్" என்கிற வியாசவசனத்தால் பிரமவிஷ்ணுவாதிகளோடு சிவனையும், இதரசத்திகளோடு பார்வதியாரையும் சமத்வங் கூறலாகாதென்றும், சமஸ்த தேவர்கட்கும் சிவனையும், சமஸ்தசத்திகட்கும் பார்வதியாரையும் உத்கிருஷ்டமாகக் கூறவேண்டுமென்றும், யாவனொருவன் தமோபூதனாய் அன்யதா கூறுவானோ அவன் பதிதனாய் ஸ்பரிசிக்கக்கூடாதவனாவனென்றும் ஸ்பஷ்டமாயப் பெறப்பட்டது. இன்னுஞ் சுருதிகளில் "యస్మాత్పరం నాపరమస్తి కించిత్" என்றும், "న తత్సమశ్చాభ్యధికశ్చ దృశ్యతే" என்றும் வந்தவாக்கியங்களால் யாதொருவனைக்காட்டிலும் உத்கிருஷ்டனுஞ் சமானனுமில்லையோ அவன் சிவனென்று வெளிப்பட்டது. இந்த வுண்மைகளால் சிவனுக்கு உத்கிருஷ்ட சமத்வமுடைய தேவதாந்தரத்தைப் பிரதிஷேதித்துச் சிவனுக்கே சர்வோத்கர்ஷத்வம் சாதிக்கப்பட்டது. இதனை அவத்தை வயத்தானமயங்கிக் கூறிய வியாசருக்குக் காசியில் புஜஸ்தம்பனம் சித்தித்ததன்றியும் "తత్త్వం మే వదనం వ్యాస శృణుష్వార్థయథార్థవత్, అహం చ జగత్కర్తా మమ కర్తా మహేశ్వరః, తస్య దేవాదిదేవస్య కర్తా కోపి న విద్యతే" என்கிற காசிகண்டவசனத்தால் விஷ்ணுவானவர் வெளிப்பட்டு ஓ வியாசனாகிய மூடனே, சத்தியமாய்ச் சொல்லுகிறேன், சமஸ்த ஜகத்துக்கும் நானே கர்த்தன், எனக்குக் கர்த்தா மஹேசுவரர், தேவதேவராகிய அவர்க்குக் கர்த்தா இடையவே கிடையாது என்று கூறினரென்று வெளிப்பட்டதை

ல் அபார்த்தங்கொண்டு புலம்பித்திரியும் அவதிகள் யாவும் பரிகாரமாயிற்றெனக். இன்னும் பலவுள்ளவற்றை விரிவஞ்சி விடுத்தாமெனக்.

இதுகாறுங்கூறிவந்த நியாயவிசேஷங்களால் பாரதமட்டங்கலுஞ் சிவபாரம்யமே பிரதிபாதிக்கப் பட்டுள்ளதென்றும், தாமதிகளாகிய பாஞ்சராத்திரிகள் சாபவசத்தராய்ச் சிவபாரம்யங்களைக்கெடுத்தும், விஷ்ணுபாரம்யங்களைத் தொடுத்தும் அபசித்தாந்தங்களைப் புகட்டி வழங்கிவருகின்றார்களென்றும் அவர்கள் விபரீதம் வெளிப்பட்டதனால் சைவர்கண் மேலேற்றி அபபேதைகள்கூறுந் துர்வாதம் நிரசிக்கப்பட்டதெனக்.

இனி நன்மதிவிளக்கப் பண்டோலத்தார் புத்திகோசரத்தைச் சற்றேவிசாரிப்போம். இந்தப்புத்திமான் இம்மட்டோடேயொழியாமல் தனது மலபந்தவாசகத்தில் கம்பராமாயணத்தையுஞ் சைவர்கள் கெடுக்கப்பார்க்கிறார்களென்றார். நன்று நன்று! கம்பன் ஒருநாளிரவில் வீதியுலாவி வரும்போது கடைவீதியில் கம்பராமாயணப் பிரசங்கம் ஒருவிதமான செய்கின்றதைச் சற்றுநின்றுகேட்டு இந்நூலில் நான்சொன்னதுஞ் சில இருக்கின்றனவென்று கூறினனென்று வழங்கிவருஞ்சொல் வழக்கால் கம்பனிருக்கும்போதே கம்பராமாயணம் திரிக்கப்பட்டதென்று வெளியாகின்றது. அந்தநூலையொருபெரிய பிரமாணமாகக்கொண்டு சைவர்களென்னமோ அதைக் கெடுக்கப்பார்க்கின்றார்களென்று விந்தைகூறுவது பரியாசாஸ்பதமெனக். கம்பன்வாக்குவான்மீகியோடு சில அம்சங்களில் பராஹுமாகையால் அப்பிரமாணத்வம் சித்தித்தது. அதவா அதனைப் பிரமாணமாகக் கொண்டாலும் அதனால் சிவோத்கர்ஷம் பாதிக்கப்பட்டதில்லை. கம்பன்பூதி சாதனத்தனாயினுஞ் சாமான்யம் வித்வச்சிரோஷ்டத்வம் சித்திக்குமேயன்றி மதசம்பந்தம் அன்வயமாகாதாகையால் அவனுடையநூலால் சித்திக்கும் உத்கர்ஷ அபகர்ஷங்கள் எம

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீஞானசம்பந்த குருவே நம:

# இரட்டையர்கள் அருளிச்செய்த

## தைவீக உலாவில

## சிவாதிக்யம்.

---

கல்லா னிழலிருந்த கண்ணுதலார் தம்முடனே
யெல்லாரையுந் தேவரென் றுரைத்த—நல்லாயோய்

பேதங்கரா விரும்பினையும் பொன்னினையர்
தாதுவென வுரைக்குந் தன்மைகாண்—மீதுலவு

நீடுசுடராழியிலத் தேரிலீரிரண்டு
பாடுசுருதிப் பரிபூட்டித்—தோடார்

நளினத்துப்பாக னடத்த வெரியாய்த்
துளவப்பகழி தொடுத்துக்—கொளுவியநாண்

மூரியரா வாகமுந் தண்டமுந் தாங்கு
மேருவென்னுஞ் சைலம் வில்லாக—வாரமுள

மூவருயிராவா மூப்புரமு நீறாக
யாவாபொரு தாண்மை யோரில—தேவா (௧)

பழித்த பெருவேள்வி பழுதாக வாளவிட்
டழித்த விமையவா வேறாதா—னிழைத்து (௨)

வதைப்பாண வருங்கூற்றை மாசகண்டாக்காக
வுதைத்தாரிவ ரல்லா துண்டோ—வெதிர்த்த (௩)

சுழற்கான மதனமாளக் கணமலரால் வெய்ய
வழற்றுணையே விஞ்ஞார்தா—னிழற்பொற (௪)

கலையா னிடந்திட்ட கண்ணுக்கோ ராழி
விலையாக நல்கினா ரேழுறா—நிலையாகத் (ரு)

தன்னுமொரு சிலந்தி சோழனுமாய்க் காவிரியும்
மன்னியரசாள வைத்தவரார்—பன்னெடுநாள் (சு)

தேடியிருவர் திரியத் தெரியாமல்
நீடுசுடர் வடிவாய் நின்றவரார்—கூடலென (எ)

வுங்காரஞ்செய்தே யுலகுண்ட மாலயனைச்
சங்காரஞ் செய்தபின்னுந் தந்தவரார்—பங்கயனைமால் (அ)

வீந்தசுடலை விபூதி தரித்திருவர்
ராந்தலைமாலை யணிந்தவரார்—மாய்ந்திடவே (கூ)

நாராயணருடனு நான்முகனுருடனுங்
கூராய் ஞலமிசைக் கொண்டவரார்—சேர (க0)

வெரிந்த பிறையெயிற்றி னீரைந்து வாயும்
பரந்து செழுங் குருதிபாய—விரிந்தொருவன்

மானார் கிடக்க மலையான மகளுடனே
யூன்றவிர லொன்றுடையவரார்—தோன்றியட (கக)

லோதவிடமுண்டுபயந்திறந்த தாமரைமேற்
கோதையர்க்குத் தாலி கொடுத்தவரார்—மாதவனைக் (க௨)

கூடியயனைக் கொடுத்தவரார் மோகினியா
ருடிமெழிற் சாத்தனைமுன் னல்கினரார்—பாடாநத (கங)

புத்தேளிரோனைப்ப புனைந்தவரார் ரலமிணுமை
கைத்தாளை கொட்ட நடங்காண்பவரார்—மத்தமுறு (கச)

மாதிரெடு மாலுதிர மத்தனையுங் கைத்தலத்திற்
பாதித்தனிலே நிறையப் பண்ணினரார்—வேதமுடன் (கரு)

றுணனென்னவே யாழ்புகுஞ் சோமுகனைச் செற்றிடுமீன்
கண்ணை யுகிராற் களைந்தவரார்—கண்ணனுரு (கசு)

ராமைவடிவந்தனிலு மாதிவராகந்தனிலு
மாமுதுகோட்டைக்கரத்தால் வாங்கினரார்—தாமரையும் (கஎ)

பேசரியசிமபுளாயப பேராட கனயமே
கேசரியை வளஞுகிராற இணடவரார—கூசா (கஅ)

தடருஞ் சலந்தரனை யளருழி சூட்டி
யுடலம பிளந்தவா வேறுணடோ—படிவினை (கசு)

முழுதளந்தமாயன முதுகெலுமபைச செந்தீ
ரொழுகவே வாஙகினா வேறுணடோ—பழுதெண (உ0)

டடமலரோ னுசசித தலையை யுகிரா
லுடனே குறைததவர் வேறுணடோ—நெடுவிசுமபு

முறறும் புதைததலையான மோதஞ் சுரநதியைச
சுறறுஞசடையிற சுவறுவிதது—மறறும்

பகீரதனின் றாழ்நாட் பாதமலா போறற
மகிதலததே போதுவிததா மறறா—புகலமைச (உஉ)

செலுததச சிறுதொணடா தேவியறுததாக்கிக
சலததிற படைதத கறியைத்—தலைகிட்ட

சுடிய மாலைச சுரிதஞசிய முதறுங
கட்டியை நல்குங கனிவாயு—மிடடதொரு

வாளியுங்காது மருங்குமணி வடமுந
தாளிணையுஞ செமபொற சதஙகையுமாய—மீளப்

பிறப்பிக தவாதம் பெரும்பிறபபை யெலலா
மறுபபிகக வலலவாதா மறறா—நறைக கொனறை (உங)

யாதிதனையொழிய வாறுறு தததுவததின
மீது மகிழநதிருககும விணணவரார—மாதிற (உச)

பொருநதி விடையாகப பூநதுழாய மாலை
விருமபி நடததினர் வேறா—அரனபெருமை (உரு)

யினனும் பலகோடி யிலலையோ யாமிருநது
சொனன பொழுதே தொலையுமோ—வுனனரிய

மூவா முதலா முதலவனையு மூவுலசிற
சாவார்பிறபபார கடஙகளையுந—தேவாக

வொகக நினைவாருக் கல்லவோ வோரேழு
மிகக நரகம விதிததது காண—மைமககண (உகூ)

மருவாா குழலியென மறறவளு மநதப
பெருவாழ வுடைய பிராணைப—பரவியவா

தெயவ வெழுததைநது மோதித திருநீறு
மெயயி லணியவி தியறறு—மையறரு

மெடடெழுதது போதி யிவாாமண ணைபபொழுது
கடடுைாகக வெனனக் கௌதமனு—ரிடடபெருஞ

சாபத தியலபுதரு மாமறையோா செய
பாபக சலிகாலப பணபுகாண—கோபவிதழ (உஎ)

மினனே யெனசசிறநதும் வேதியராகிய பிறநது
மெனனே பெருமை யிருநதவா—முனனை

மறையி னெழுததைநதும் வாயாரவோதி
நிறைய வணிநது திருநீறும—பிறவியெலலாம்

வாட்ட வறியாமல் வாளா பிறவிதனை
யீட்டுவதே பாவ மெனவுணாதத. (உஅ)

என்றற் றெருட்டககத்தனவாகிய அருள்வாக்கியங்களால உண்மைகண்டுணர்வாராக. இவைகட்குப் பிரமாணம (களக) வது பக்கத்திலமேல (க) முதலாகிய குறிப்புகளிலஎழுதி யிருக்கிறபடியே கண்டுணாக.

---

இரணடாவது பாகம அதிவிைாவிலேதானே வெளியிடபபடும்.

(௧௩) பஸ்மஜாபாலம்-உபதேசகாண்டம்-கூர்மபுராண முதலியன.

(௧௪, ௧௫) சிவரஹஸ்யம் - பிரம்ஹாண்டபுராணம்-கூர்மபுராணமுதலியன.

(௧௬, ௧௭, ௧௮) ஆதித்தியபுராணம் சரபோபநிஷத்து - பிரமஹாண்டபுராணம் உத்தரபாகம் - அதர்வணம் - தைத்திரீயமுதலியன.

(௧௯) மானவீயசம்ஹிதை-ஆதித்தியபுராண முதலியன.

(௨௦, ௨௧) சரபோநிஷத்து-வாமனபுராணம்-ஸகாந்தமுதலியன.

(௨௨) இராமாயணம் பாலகாண்டம்-பாரதம்-ஆரண்யபாவம்-வாமனபுராணமுதலியன.

(௨௩) உபமன்யுபக்தவிலாசம்-சிவரஹஸ்யமுதலியன

(௨௪) வேதம்-சிவாகமமுதலியன.

(௨௫) ஈசானசம்ஹிதை-வாசிஷ்டலைங்கிய முதலியன.

(௨௬) ருக்வேதம்-பாராசரஸம்ருதி-ஜாபாலசுருதி முதலியன

(௨௭, ௨௮) சாபாலசுருதி-பாகவதம் - ஏகருஷ்யபவகாண்டம்-பவிஷயோத்தரபுராணம் - பராசரபுராணமுதலியன
சாபமிட்டமஹரிஷிகள், ததீசி - உபமன்யு - துர்வாசர் - கௌ; மா - பராசரர் - பிரமஹர்முதலியவர்களாம்.

---

இப்புத்தகம் வேண்டியவர்கள் சென்னையைச் சார்ந்த சூளை கறையான்குட்டை ரொட்டிக்கிடங்கு திருவேங்கட முதலியார்வீதியில் (௧௮) வது இலக்கமுடைய வீட்டில் ம-ள-ள-ஸ்ரீ சபாபதிமுதலியாரிடத்தில் விலைரூபா (௧) கொடுத்துப் பெற்றுக்கொள்ளலாம். இதனால்வரும் பிரயோசனம் சிவதர்மங்களுக்கே உபயோகிக்கப்படும்.